உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்


| தொகுதி 6 | துன்மதிஸு சித்திரைமீ கஉ<br>1921ஸு ஏப்பிரல்மீ 13உ | பகுதி 10 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

ஆதியாய் நடுவா யந்தமாய்ப் பந்தம்
யாவுமற் றகம்புற நிறைந்த
சோதியாய்ச் சுகமா யிருந்தவெம் பெருமான்
றொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணங் கைவிடன் முறையோ
புன்மையே னென்செய்கேன் மனமோ
வாதியா நின்ற தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே.

வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர்
வந்தெனை யீர்த்துவெங் காமத்
தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்
சிந்தைநொந் துருகிமெய்ம் மறந்து
தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்
றாயினுங் கருணையா மன்றுள்
நாயக மாகி யொளிவிடு மணியே
நாதனே ஞானவா ரிதியே.

வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டு துவண்
டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்
பூவிற்கும் வான்கடையிற் புல்விற்பார் போலவொன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே.

கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென
வாடியவென் னெஞ்சமுக வாட்டமுநீ கண்டிலையோ
தேடியநின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய் பதியே பராபரமே.

# ஆனந்தபோதினி

துன்மதி௵ சித்திரை௴ ௧௨

## மாணவர் நடவடிக்கை

மானிடஜன்மமெடுத்த ஒவ்வொருவர்க்கும் கல்வி இன்றியமையாத தாகுமென்பது யாவரும் அறிந்த விஷயமே. ஏனெனில், இஜ்ஜன்மத்தில் தான் ஆன்மா இருமைப் பயன்களையும் அடையக் கூடியது. முக்கியமாய்ப் பிறப்பிறப்பாகிய துக்கசாகரத்தினின்றும் பேரின்ப முத்தியாங் கரைசேர வேண்டியது இஜ்ஜன்மத்தில் தான்.

இத்தகைய கல்வியை நம்மக்கள் பெறுவதற்காக அவர்களைப் பாடசாலைகளுக் கனுப்புகிறோம். பாஷாஞானமாகிய வெறுங்கல்வி மட்டும் ஒருபயனையு மளிக்காது. கல்வியின் மூலமாக நல்லொழுக்கம் நன்னெறிகளை யுணர்ந்து அவ்வழி நின்றொழுகி, அதன்பின் பரமான்மாவை யடையும் மார்க்கத்தையுணரக் கல்வி ஓர் சாதனமாக விருக்கின்றது. இதனானே,

“ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை” என்று கூறப் பட்டது.

அனுபவமாகப் பார்க்கு மிடத்து ஒருவனிடத்து வெளிப் படையாகக் காணப்படும் ஒழுக்கம் நடைகளினாலேயே அவன் உலகில் மரியாதையோ அவமரியாதையோ, கௌரவமோ அகௌரவமோ, மதிப்போ அவமதிப்போ பெறுகிறான். இவ்வாற்றால் நம் மக்கள் கல்விகற்பது ஒருபக்க மிருந்தாலும், முக்கியமாக அவர்கள் நல்லொழுக்கம் நன்னடக்கைகளை யடையவேண்டுவது அத்தியாவசியமென்று நாம் உணரவேண்டும். கல்வியோடு கூடவே ஒழுக்கம் நடைகளும் கற்பிக்கப்படுவதே ஒழுங்காகும். இதற்காகவே ஆசானிலக்கணம் கூறவந்த ஆன்றோர்கள், ஆசிரியன் நற்குலத்திற் பிறந்தவனாகவும், ஜீவகாருண்யம், ஈசுரபக்தி, பலநூலாராய்ச்சி, போதனாசக்தி, நல்லொழுக்கம், நன்னடக்கை, உலக அனுபவம், பாரபக்ஷமின்மை முதலியவைகளை யுடையவனாகவும் இருக்கவேண்டுமென்று கூறி யிருக்கின்றனர்.

நமது ஆசார ஒழுக்கங்கள் சாத்திர சம்மத மானவை. மற்ற நாடுகளின் ஆசார ஒழுக்கங்களுக்கும், நம் நாட்டு ஆசார ஒழுக்கங்களுக்கும் மிக்க வித்தியாசமுண்டு. திருட்டாந்தமாக, மேல் நாட்டாருக்குள் வாலிபர்களுக்குக் கொஞ்சம் வயதுவந்து விட்டால் சாதாரணமாய் மூத்தோர் முன்பே சுருட்டுப் பிடிப்பது, குடிப்பது முதலிய எல்லாக் காரியங்களையும் செயகிறார்கள். நம் நாட்டாரில் ஒருவனுக்கு எவ்வளவு வயதாயினும், தன்னைவிட மூத்தவர்கள் முன் மூக்குத்தூள் போடவும் அஞ்சுவான். எல்லா வயதினரும் தம்மினும் மூத்தோர்முன் மரியாதையாகவே நடந்து கொள்வார்கள்.

சிறுவயதிலேயே, மனம் வெள்ளைச் சீலைபோல் களங்கமற்றிருக்கும்போதே, கல்வியோடு கூடவே ஆசார ஒழுக்கங்களின் போதனையும் பழக்கமும் பெறும் பொருட்டே நம நாட்டில் குருகுலவாசம் ஏற்படுத்தப்பட் டிருந்தது. இத்தகைய அத்தியாவசியமான ஆசார ஒழுக்கங்கள் நம் நாட்டுத் தற்கால மாணவர்களிடம் எவ்வாறிருக்கிறது என்பதைப்பற்றியே யிப்போது நாம் கவனிக்க வேண்டி யிருக்கிறது. நம் தாய்நாட்டின் எதிர்கால க்ஷேமநிலைமை நம்மக்களைப் பொறுத்ததே யாகையால் இவ்விஷயத்தைப் பற்றிக் கவனிப்பது அவசியமேயாகும்.

இப்போதிருக்கும் நம் நாட்டுமாணவர்களின் ஆசார ஒழுக்கங்கள் திருப்தியாக விருக்கவில்லை யென்பது விசனிக்கத்தக்கது. அந்தோ ! அதோடு நிற்காமல் முற்றும் நேர்மாறான வழியில் இருப்பதாயின் அதனாற் பெருந்தீங்கு விளையுமென்று சொல்லவும் வேண்டுமோ?

சுமார் முப்பது வருடங்களுக்கு முன் மாணவர்கள்-இருபது வயதானவர்கள் கூட—மூக்குத்தூள் போடவும் அஞ்சுவார்கள். எவனேனும் ஒருவன் கெட்ட சகவாசத்தால் அப்பழக்க முடையவனாகிவிட்டால், இரவில் கடைவீதிக்குச் சென்று பொடிக்கடையில் தன்னை யறிந்தவர்கள் ஒருவருமில்லா திருக்கும் சமயம் பார்த்துப் பொடி வாங்கி வந்து மிக்க பத்திரமாக அதை மறைத்து வைத்துக் கொண்டு, யாருமில்லாத இடத்தில் மறைவில் சென்று போட்டுக் கொள்வான். ஆ ! இப்போதோ பெரும்பாலான மாணவர்களின் நடையுடைகளே நம் ஆசாரத்திற்கு முற்றும் மாறாக மாற்றப்பட்டிருக்கின்றன. தகாத மேல்நாட்டு ஆசாரங்களெல்லாம் பழக்கத்தில் வந்திருக்கின்றன. அதிலும் இச் சென்னைமாநகரில் எட்டுவயதுச் சிறுவன்கூட வீதியில் பீடி - ஸிகரெட் பிடித்துக்கொண்டு சற்றும் இலச்சையின்றிச் செல்வதைக் காணலாம். மாணவர்கள் கக்கத்தில் பாடபுத்தகங்களை யிடுக்கிவைத்துக் கொண்டு ஸிகரெட் பிடித்துக் கொண்டே வீதிவழியே பாடசாலை வாயிற்படிவரை செல்வதைச் சாதாரணமாகக் காணலாம். இது ஆசாரஹீனம் என்ப தொருபக்க

மிருக்க, அந்தோ! அதனால் அவர்கள் தேகத்திற்கே பெருந்தீங்கை யுண்டாக்கிக் கொள்கிறார்கள்.

இவற்றிற் கெல்லாம் காரணம் இப்போதிருக்கும் கல்விமுறை யின் சீர்கேடே யென்பதில் சற்றும் ஐயமில்லை.

சுமார் முப்பது முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்புவரை யில், நம் நாட்டுச்சிறுவர்களுக்கு ஐந்துவயது முடிந்ததே, வித்தியா ரம்பம் செய்யப்படுவது ஒரு சடங்குபோல் செய்யப்பட்டு வந்தது. செல்வவந்தர் மக்களாயினும் சரி, ஏழைகள் மக்களாயினும் சரி முதலில் 'தெருப்பள்ளிக்கூடம்' என்ற தாய்ப் பாஷை கற்பிக்கப் படும் பாடசாலைக்கே அனுப்பப்படுவார்கள். "ஹரி ஓம் நமசிவாய சித்தன்னமஃ" என்பதே முதலில் கற்பிக்கப்படும். அந்த உபாத்தி யாயர்க ளெல்லாம் உலக அனுபவமுடைய முதியோர்க ளாகவே யிருப்பார்கள். காலையில் பிள்ளைகள் பாடசாலைக்கு வந்தவுடனே யாவரும் எழுந்து சரஸ்வதி தோத்திரம், விநாயகர் தோத்திரம் முதலியவைகளைக் கூறவேண்டும். மாலை பாடசாலையை விட்டு வீட் டிற்குச் செல்லும் போதும் தோத்திரம் செய்யவேண்டும். பிள்ளை களில் யாரேனும் நெற்றியில் விபூதி, திருநாமம் முதலிய மதக்குறி யொன்று மணியாது வந்தால் அவன் தண்டிக்கப்படுவான். அவன் நெற்றியில் சாணப்பொட்டு வைக்கப்படும். வீட்டில் பிள்ளைகள் விநாயகர் பூஜைசெய்யவில்லை யென்றாவது, பெற்றோர்க்கு அடங்கி நடக்கவில்லை யென்றாவது, ஏதேனும் துஷ்டகாரியம் செய்ததாக வாவதுபெற்றோர் உபாத்தியாயரிடம் கூறினால், அத்தகைய பிள்ளை கள் உபாத்தியாயரால் கண்டித்துத் தண்டிக்கப் படுவார்கள்.

அப்பாடசாலைகளில் சிறுவர்களுக்கு நமது மதாசார சம்பந்த மான பாடங்களும், நீதிகளையும், புத்திமதிகளையும் போதிக்கும் சதகங்கள் முதலியவைகளும், கணக்கும் கற்பிக்கப்படும். இதனால் சிறுவர்கள் அன்னியபாஷை கற்பிக்கப்படும் பாடசாலைக்குச் செல்லு முன்பே தாய்ப்பாஷையின் பெருமையைச் சுமாராக வறி ந்து, அதில் அபிமான முடையவர்க ளாவதோடு, நமது மதசம் பந்தமான விஷயங்களையும் சற்று உணர்ந்தவர்க ளாகிறார்கள். இத னால் பின்னால் அவர்களுக்குத் தாய்ப்பாஷையிலும் சுயமதக்கல்வி யிலும் விருப்பம் விர்த்தி யடைகிறதேயன்றி, அவற்றில் அவமதிப் புண்டாக வழியில்லை.

அந்தோ! இப்போதோ நமது மாணவர்களுக்குத் தாய்ப் பாஷையில் அலட்சியமே யுண்டாய் விடுகிறது. மதக்கல்வியே யடி யோடில்லை. ஆரம்பத்திலேயே அன்னிய பாஷையைக் கற்கத்தொ டங்குவதால் அப்பாஷா சம்பந்தமான ஆசார ஒழுக்கங்களே இவர் கள் மனதிற் படிகின்றன. இப்போது அவர்கள் வாசிக்கும் பாட

புஸ்தகங்களில் கூறப்பட்டுள்ள விஷயங்களனைத்தும் பெரும்பாலும் அன்னிய நாட்டில் நடக்கும் விஷயங்களும், அன்னிய மதாசார ஒழுக்கங்களின் சம்பந்தமுடைய விஷயங்களுமேயாகும். இதனால் நமது மாணவர்களுக்கு நமதுமதாசார ஒழுக்கங்களைப் பற்றிய போதனையே யில்லாமற் போவதோடு, அன்னிய ஆசார ஒழுக்கங்கள் அவர்கள் மனதிற்பதிந்து இத்தகைய சீர்கேட்டை யுண்டாக்கி விடுகின்றன.

அந்தோ! தாய்ப்பாஷை கட்டாய பாடமாக்கப்படா விட்டால் நமது தாய்நாடு கூடிய சீக்கிரத்தில் என்ன கதியடையு மென்பதைத் தயவுசெய்து சிந்தித்துப் பாருங்கள். நமது மதாசார ஒழுக்கங்கள் முதலிய யாவும், நமது ஆன்மார்த்த போதனைகளும், நம் தாய்ப்பாஷையில்தான் இருக்கின்றன. அத்தகைய தாய்ப்பாஷை க்ஷீணதசையடைந்தால் வேறு பாஷையில் நம்மக்கள் எத்தகைய உயர்தரக்கல்வி கற்றாலும் என்னபயன்? இவ்வுலக போகங்களைமட்டுமே யனுபவிக்கலாம். இவ்வாறே யின்னும் நடக்கவிடின், சீக்கிரத்தில் நம் நாட்டில் உலோகாயதம் நிலைத்தோங்கிவிடும். பிறகு என்னாகு மென்பதை யெழுத நம்மனம் நடுக்குறுகிறது. கடவுளே! இன்னமும் நம்மவர் இதைக் கவனியாதிருத்தல் நீதியாகுமோ!

இப்போது கல்வி யபிவிர்த்தியைப் பற்றிய விவகாரம் நம்மவர் வசத்தில் விடப்பட் டிருக்கிறது. இவர்கள் கூடிய சீக்கிரம் நம்மக்களுடைய கல்வியில் தாய்ப்பாஷையைக் கட்டாய பாடமாக்கி, நமது ஆசார ஒழுக்கங்களையும், பிற்காலத்தில் நமது மக்களின் உலக அனுபவத்திற்கு உதவியாயிருக்கக்கூடிய நம் நாட்டு விவகாரங்களையும், தேசபக்தியை வளர்க்கும் விஷயங்களையும் போதிக்கும் பாடபுத்தகங்களை யவர்கள் கற்கும்படி ஏற்பாடுசெய்யா விட்டால், நம் தாய்நாடு மிக்க பரிதாபமான நிலைமைக்கு வந்துவிடுமென்பதில் சற்றும் ஐயமில்லை.

பெற்றோர்களிலும் அனேகர் தம் பிள்ளைகள் படித்து பாஸ் செய்து விட்டால் போதும் என்று கண்மூடித்தனமாகக் கருதுகிறார்களே யன்றி, "நம் மக்களுக்கு முதலில் தாய்ப்பாஷையையும் நமது மதாசார ஒழுக்கங்களையும் கற்பித்துப் பிறகுதான் அவசியமான அன்னியபாஷையை (வயிற்றுப் படிப்பை) க்கற்பிக்க வேண்டும். இன்றேல், நம் தாய்நாட்டிற்குப் பெருங்கேடு விளையும்" என்பதை யுணர்கிறார்க ளில்லை.

ஒரு மனிதன் தேகத்தில் கண்களுக்குப் புலப்படாத அணுவினும் சிறிய ஓர் விஷக்கிருமி பிரவேசிக்கும் போதும், அது தேகத்திலேயே விர்த்தியடையும் போதும் அவன் அதை யுணர்வதில்லை. அது கடைசியில் ஒரு வியாதியை யுண்டாக்கித் திடீரென்று சில மணிநேரங்களில் கொல்லும் போதுதான் தெரிகிறது. ஆனால் அப்

போததற்குத் தப்பமுடியாது. மேற்கண்டகுறை இக்கிருமி போன்றதே. இப்போதே அதனுலுண்டாகக்கூடிய தீமை நமக்குப் புலப்படாததால், நம்மவர் அதைக் கவனிக்கா திருக்கிறார்கள். அந்தோ! பின்னல் அதனுல் நேரிடும் பெருங்கேட்டைத் தடுக்கமுடியுமோ?

நம்மவர் இவ்விஷயத்தைக் கவனித்துத் தக்க ஏற்பாட்டைச் செய்யாதிருந்தால், காருண்ய துரைத்தனத்தார் நமக்கு எத்தனை சீர்திருத்தங்களை யளித்தால்தான் என்ன பயன்? நடந்துசென்றால் கால் நோகுமென்று ஒரு குதிரையை ஒருவனுக் களிக்கிறார்கள். அவன் அக்குதிரைமேல் வால்புறம் திரும்பி உட்கார்ந்து கொண்டு அதையோட்ட முயன்றால் குதிரையால் என்ன பயனடைவான்?

கல்வியிலாகாவில் சம்பந்தப்பட்ட நம்மவர்களாகிய கனவான்களும், ஏனையோரும் இனியேனும் இது விஷயத்தில் கவனத்தைச் செலுத்தி, நமது மக்கள் நல்ல ஆசார ஒழுக்கங்களை யுடையவர்களாய் க்ஷேமாபி விர்த்தியடையவும், நம் தாய்நாடு பெருங்கேட்டிற் காளாகாமல் தப்பி முன்னேற்ற மடையவும் செய்யவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

ஓ! கருணாநிதியாகிய சச்சிதானந்தப் பரம்பொருளே! எப்போதும் தெய்வீகத்தன்மை நீங்காதிருக்கும் இப்புண்ணிய பூமியில் மெய்ஞ்ஞானச்சுடர் மங்காவண்ணம் பாதுகாக்க உம்மையன்றித் துணை வேறில்லை யன்றோ! இப்புண்ணிய பூமியை யிந்த ஆபத்தினின்றும் தப்பவைத்து இது க்ஷேமமுற உம்மையே சரணாகதியாக வடைகின்றோம். ஓம் தத் ஸத்.

---

## கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

முன்னொரு காலத்துக் கோதாவரி நதிக்கருகில், 'புஷ்பபுரி' என்றும், 'பிரமபுரம்' என்றும் பெயருடைய நகரங்க ளிரண்டுண்டு. அவை, கல்வியாலும் செல்வத்தாலும் கைத்தொழிலாலும் வர்த்தகத்தாலும் மேன்மை பெற்றவை. அந்நகரங்க ளிரண்டினையும் ஆண்டு வந்த 'இராஜதிலகன்' என்னுமரசன், கல்விக்கு உறைவிடம், கற்றோர்க்கு அருங்கலன், வறியோர்க்குப் பெருநிதி, கருணைக்கு அருங்கடல், அறத்துக்கு நற்றோழன், மறத்துக்குக் கடும்பகை. இவ்வாறு சிறந்து விளங்காநின்ற அவ்வரசன் செங்கோல் செலுத்தி வருநாளில், மாதம் மும்மாரிபெய்தமையால், அப்பட்டணங்க ளிரண்டும் நீர்வள நிலவளங்களாற் செழித்து விளங்கின.

அவற்றுள் புஷ்பபுரி என்ற நகரத்தில், 'தேவதத்தன்' என்னும் ஓர் அந்தணனும், பிரமபுரமென்ற நகரத்தில் 'தேவராதன்' என்னும் ஓர் அந்தணனு மிருந்தார்கள். அவர்கள் கல்வியிற் கரைகண்டோ ராயினும், வறுமைப்பிணியால் வருத்தமுற்று வந்தனர். ஆதலின், அவர்கள் தினங்

தோறும் பற்பல இடங்களிற் சென்று பிச்சையெடுத்துச் சீவனஞ்செய்ய வேண்டுவதாயிற்று. அவ்விருவரில் தேவ்ராதன் பெருங்குடும்பி. அவன் மனையாளோ கற்புக்கரசி, கணவனையே கடவுளாகக் கருதுந்தன்மையள்; அவனது குறிப்பறிந்து நடக்குங் குணவதி, பொறுமையே தனக்குப் பூஷணமாகக்கொண்ட பெண்மணி. இவ்வாறு குணச்சிறப்புடைய அம்மங்கை, கணவன் நாள்தோறும் பிச்சையெடுத்துக் கொணரும் அரிசியைச் சமைத்துக் கடவுளுக்கு நைவேத்தியம் செய்து, கொழுநனுக்கும் மக்களுக்கும் அளித்துப் பின்பு, ஏதேனும் ஒரு சிறிது மிஞ்சுமாயின் அதனைத் தான் அருந்துவாள்.

இவ்வாறாக, தேவராதன் தான் பிச்சைக்குச் செல்லுகையில், "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்," என்று சொல்லிக் கொண்டே செல்வது வழக்கம். தேவதத்தனோ என்றால், அவன் கடவுளிடத்து அத்துணை நம்பிக்கை கொண்டவனல்லன். இங்ஙனம் தேவராதன் சொல்லிக் கொண்டிருக்கக்கேட்ட இராஜதிலகன், அதன் உண்மையைச் சோதிக்கக் கருதி, தன் மந்திரியினிடம் ஆலோசிப்பானாயினன். இங்ஙனம் பலநாள் கழிய, அப்பால், ஒருநாள் தேவதத்தன் தன் வழக்கப்படி பிச்சைக்குச் சென்றபோது, அரசன் மாளிகைக்குச் சென்றான்.

அரசன், ஒரு பூசணிக்காயின் மேற்பக்கத்தில் ஓரங்குல அகலம் துளையொன் றுண்டாக்கி, அக்காயினுள் ளிருக்கும் விதைகளை எடுத்தெறிந்துவிட்டு, அத்துளை வழியே பல பொன் நாணயங்களை அதனுட் செலுத்தி, பின்பு அத்துளையைக் கண்ணுக்குத் தெரியாதபடி மூடி, அதனை அத்தேவதத்தனிடம் கொடுத்து அனுப்பினன். அது பெற்ற தேவதத்தன், அக்காயுடன் தன் இல்லம் நோக்கிச்செல்லும் மார்க்கத்தில் தேவராதனைச் சந்தித்தான். உடனே தேவதத்தனுக்கு, "இந்தக் காயைக் கொண்டு செல்வதில் இவ்வளவும் நமக்கு உபயோகமாவ தில்லையே? வீணேதானே அழியும். ஆதலின், இதனைத் தேவராதனுக்குக் கொடுத்தால், இது முற்றும் பயன்பெறு மன்றோ? அவனோ பெருங்குடும்பி, ஆதலால், இதனை அவனுக்கே கொடுத்து விடல்வேண்டும்" எனும் எண்ணம் உதிக்க, அவன் அங்ஙனமே அதைத் தேவராதன் கையிற் கொடுத்துச் சென்றான்.

தேவராதன், அதனைத் தன் வீடுகொண்டு சென்று, மனைவிபாற் கொடுக்க, அவள் உடனே அதனைத் திருத்துகையில் அதிலிருந்த பொன் நாணயங்கள் பலபல வென்று கீழேவிழுந்தன. அதுகண்ட அம்மாது, அச்சமும் வியப்புங்கொண்டு தன் கணவனுக் கறிவிக்க, அவன் அதனுண்மை யறியாதவனாதலின், திடுக்கிட்டு, "இது ஏதோ தெரியவில்லையே? இதனை நாம் வைத்துக்கொள்ளல் வீண்பழிக்கன்றோ காரணமாகும்? ஆதலால், தேவதத்தனிடத்திலேயே இதனைச் சேர்த்துவிடல் வேண்டும்" எனக்கருதி, அவனைத் தேடிச்சென்றான். தேவராதன் தேவதத்தனை எங்குங்காணப் பெறாமையால் மனக்கவலையோடு அரசனிடம் அணுகி, நிகழ்ந்தவற்றைக் கூறினன்.

அரசன், தேவராதனுடைய உண்மை யுடைமைக்கும், தேவதத்தனுடைய தயாகுணத்துக்கும் வியந்தமையோடு, கடவுளைநம்பினோர் பெற

லாகும் பேறுகளை நினைந்து நினைந்து மகிழ்வாளுயினுன். அப்பால் அரசன், தேவதத்தனையும் வருவித்து, தான் செய்த செய்கையின் உண்மையை விளக்கி, தேவராதனையே பொன் நாணயங்களைப் பெறுமாறுசெய்து தேவதத்தனுக்கும் சிறிது பொருள்கொடுத் தனுப்பினுன். பிறகு, இருவரும், தம்முள் சிறிதும் கலகங்கொள்ளாமல், இல்லஞ்சென்று இன்பமாய் வாழ்ந்தனர்.

ஆதலின், என் அன்பார்ந்த சகோதர சகோதரிகளே! எக்காலத்தும் தெய்வத்தை நம்பினோரே உயர்ந்தவராவர். கடவுள்பாற்சிறந்த நம்பிக்கை கொள்ளாத தேவதத்தன், தான் அளவற்ற பொன் நாணயங்களைப் பெற்றும், அவற்றை அனுபவிக்கப் பெற்றிலன்; கடவுளையே நம்பினவனுன தேவராதனே அவற்றை அனுபவிக்கப் பெற்ருன். ஆகவே, கடவுளைநம்பினோர், ஒருகாலமும் கைவிடப் படமாட்டார்; என்பதை நீங்கள் திட்டமாகத் தெரிந்துகொள்வதோடு இதர விஷயங்களிலும் சரிவரநடந்துகொள்ளவேணுமாய் வணக்கத்துடன் கேட்டுக்கொள்கிறேன்.

எஸ்—எம். பிள்ளை,

கூத்தூர். நாகப்பட்டணம் தாலூக்கா.

---

# இயற்கையறிவும்—பகுத்தறிவும்

நமது ஆனந்தபோதினியின் தை மாதத்து சஞ்சிகையின் 260-ம் பக்கத்தில் வெளிவந்துள்ள "இயற்கை யறிவும் பகுத்தறிவும்" என்ற விஷயத்தை யெழுதிய, கோயமுத்தூர் ஸ்ரீ கிருஷ்ணர் வாசகசாலை ம-ள-ள-ஸ்ரீ வி. பி. சுந்தரம் அவர்கள், 2-வது பாராவில் 'மிருகங்களுக்கு இயற்கையறிவு மாத்திர (மும் இருப்பது)ந் தான்' என்றும், 3-வது பாராவில் 'தங்கள் தங்கள் காரியங்கட்கு மிருகங்கள் இயற்கை யறிவையும், மனிதர் செயற்கை யறிவையும் உபயோகப்படுத்த வேண்டி யிருக்கிறது' என்றும், 'மிருகங்களின் பகுத்தறிவில் யாதொரு ஒற்றுமையும் ஆராய்ந்து பார்க்குந் தன்மையும் கிடையாது......வெளித் தோற்றத்திற்காவது பகுத்தறிவாகத் தோன்றும்' என்றும் கூறுகிருர்.

சுமார் 10-15 வருடங்கட்கு முன்னிருந்த, ஈ. மார்ஸ்டன், பீ. ஏ., அவர்களது வாசக புத்தகத்தில் 'சேவலும் மாணிக்கக் கல்லும்' என்ற ஓர் பாடமிருந்ததையும், அதில் ஒரு சேவல் தன் இரைக்காகக் குப்பையைக் கிளறிக்கொண் டிருக்கும்போது, அதிற்கிடந்த மாணிக்கக் கல்லொன்றையும் அச்சேவல் சீ! இதென்ன கல்லென்று தன் காலினுல் தள்ளினதாகக் கூறப்பட்டிருப்பதும் நண்பர்கட்கு ஞாபக மிருக்கலாம். அக்கல்லானது அச்சேவலுக்குக் கல்லாகத்தோன்றினும், அக்கல் உண்மையில் மாணிக்கக் கல்லல்லவோ? அதுபோல், நண்பரே 'மிருகங்களின் பகுத்தறிவில்' என்று, அவைகட்குப்பகுத்தறிவு இருப்பதாக ஒப்புக்கொள்ளும் அவ்வறிவு, நண்பரது வெளித்தோற்றத்துக்குக்கு 'யாதொரு ஒற்றுமையும் ஆராய்ந்து பார்க்குந் தன்மையும் கிடையா' விட்டாலும் அது பகுத்தறிவு தானே!

"ஒரு வீட்டின் அறையிலிருந்த பூனை தான் இருந்த அறையின் கதவு தாள்போட்டு மூடப்பட்டிருந்தது கண்டு, தான் மெல்ல மேலே எழும்பித் தன் காலால் கதவின் தாழ்ப்பாளைத் திறந்துவிட்டது. அது பழையமாதிரி யான தாழ்ப்பாள். அதன் ஒரு பக்கத்தைக் கையினால் அழுத்தினால், தாழ் சுழன்று கதவு திறந்துபோகும். இதை அந்தப் பூனைக்குக் கற்பித்தது யார்? வீட்டுக்காரர் திறக்கும்போது பார்த்திருந்து பூனை அந்த நுட்பத் தைத் தெரிந்துகொண்டதோ, அல்லது தானே ஆலோசித்துத் தெரிந்து கொண்டதோ தெரியாது. இதேவிதமாக மற்றொரு பூனை ஒரு அறையின் தாழ்ப்பாளைத் திறந்துவிட்டது. அது குறுக்கே தள்ளுகிற தாழ்ப்பாள். அந்த அறையில் ஒருவன் தனியே படுத்திருந்தான். திடீரென்று தாழ்ப் பாள் ஓசையைக் கேட்டுக் கதவு திறக்கப்படவே, அவன் இதென்ன வென்று திடுக்கிட்டு எழுந்து பார்த்தான். அப்பொழுதும் பூனை கதவி லேயே தொத்திக்கொண்டிருந்தது என்று ஒருவர் சொல்லுகிறார். இது தேகபலத்தினால் ஆகிற காரியமே தவிர, யுக்தியாலும், ஆலோசனையா லும் செய்கிற காரியம் அல்லவென்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். ஆலோசனை யில்லாவிட்டால், இப்படிச் செய்தால் கதவு திறந்து போகு மென்பது பூனைக்கு ஒருபொழுதும் தெரியாதாகையால், எளிய வாயில்லா ஜந்துக்களுக்கும் ஆலோசனைத் திறமை உண்டென்று அநேகர் ஆச்சரியப் பட்டுச் சொல்லி யிருக்கிறார்கள்" என்று சென்னையில் எலிமெண்டரி உபாத்திமார்களுக்கென உலவிவந்த போராசிரியன் என்ற மாதாந்தத் தமிழ்ச்சஞ்சிகை தனது 4-ம் பாகத்தின் 190-ம் பக்கத்தில்கூறியிருக்கிறது.

புறாக்கள் எவ்வளவு தூரம் போனாலும், தங்களிருப்பிடத்தைத் தேடி வந்து அடைந்து விடுகின்றன.

1909-ம் வருஷத்தில் ஷோலாப்பூரில் குரங்குகள் தம் எஜமான னைக் கொன்ற கொலை பாதகர்களைக் கண்டு பிடித்திருக்கின்றன.

1910-ம் வருடத்தில் மோரீஷில் யானை யொன்று தன் மாவுத்தன் தனக்குச் சரியான ஆகாரம் கொடுக்காததைப் பற்றி, தன் எஜமானருக்கும் நீதியதிபருக்கும் உணர்த்திப் பின் நீதியதிபர், எஜமானன் கவனியாத தைப்பற்றி அவருக்கு அபராதம் விதித்தபின், அவர் பின் போனதாகத் தெரிகிறது.

இரண்டொரு வருடங்கட்கு முன் இரண்டு எருதுகள், தம் எஜமான னைக் கொன்ற கொலை பாதகர்களைக் காட்டிக் கொடுத்திருக்கின்றன.

கிளி யொன்று, கெட்ட நடத்தையால் மகனைக்கொன்ற தாயொருத் தியை அவளது புருஷனுக்குத் தெரிவித்திருக்கிறது.

இவ்விதச் சம்பவங்கள் எத்தனையோ இங்கெழுதலாம். எனினும் எத் தனையோ அற்புதங்கள் தெரியாமலும் அறியக்கூடாமலு மிருக்கலாம்— இருக்கின்றன. எனினும், "இவ்வித குணம், மிருகங்களிடம் இருக்கும் வரை அது இயற்கையறிவு, மனிதரிட மிருந்தால் பகுத்தறிவு" என்றும், 'யானைகள் தங்களுக்குச் செய்யப்பட்ட நன்மைக்கு நன்மையும், தீமைக் குத் தீமையும் செய்கின்றன, இது அவற்றின் இயற்கைக் குணம்' என்றும் கூறிவிட்டு, 'அவைகளின் தந்திரமும் மனிதருக்காக வேலை செய்வதும்,

பழக்கப்படக் கூடிய குணமும் இயற்கைக் குணத்திற்குச் சிறிது மாறுபடு கின்றன்' எனவும் கூறுகின்றார். இதிலிருந்தே பகுத்தறிவும் அவைகட்கு உண்டென்பது அவரது 'இல்லை' யென்ற உரைக்கு முரணாகவும், உண்டு என்னும் உண்மையை நிதர்சனமாகவும் விளக்கா நிற்கின்றது. அன்றியும், சூடாமணி நிகண்டின் 12-வது பல் பெயர்க் கூட்டத் தொருபெயர்த் தொகுதியில் 138-வது செய்யுளில்

"வானவர் மனிதர் கீழ்போய் மாழ்கிய நரக ரோடு
கானுறை விலங்கு புள்ளு காட்டு நா லறிவி னேடே
ஊனமில் செவியுமாங்கே யுறுவினை யறிவிற் சீவன்
மானமர் நோக்கி னல்லாய் மனமுமொன் றதிக மாமே"

என்பதிலிருந்து வானவர், மனிதர், நரகர், விலங்கு, புள் ஆகிய இன்னவர்க்கு பரிசம், சுவை, வாசனை, கண்ணால் உருவத்தை அறிதல் ஆகிய நான்கினேடு, செவியினால் ஒலியையும் அறிவதோடு, மனத்தால் பகுத்து அறியும் அறிவும் விசேடமாக உண்டு என்பதையும் கவனிப்பாராக.

"இவ்விசேட அறிவு விலங்கு புட்களுள் ஒரு சாரனவற்றிற்கே கொள்க" வென, ஆதிகாலத்தில் சூரியனது வரத்தினால் உதித்த திவாகரரும், சிறப்பில் மிகுந்த பிங்கலரும், திவாகரம் பிங்கலந்தை யென்னும் நூல்களைச் செய்ய, இவைகள் கற்கப்படுவதற்கு எளியவைகளல்ல வென்று நினைத்த, குன்றையூரிற் பிறந்த சோதிடநூல், நீதிநூல் வல்லவரும் திருப்புகழ் புராணஞ் செய்தவரும், திவாகரத்திலே வரும் முறைமைபோல வைத்து, பிங்கலந்தையில் ஒருங்குள பொருளையும் ஓர்ந்து, விருத்தத்தில் சூடாமணி நிகண்டாகச் செய்தவருமாகிய மண்டலவரும் பிரித்துரைத்திடாததை, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்கள் மருகரும் மாணக்கரும் வித்துவ சிரோமணியுமாகிய ந. ச. பொன்னம்பலப் பிள்ளையவர்கள் மாணக்கர், சென்னை சைவ வித்தியாநுபாலன யந்திரசாலையின் சொந்தக்காரருமாகிய சுவாமிநாத பண்டிதரவர்கள் உரை செய்திருப்பதும் குறிப்பிடத் தக்கது. எனவே, மிருகங்களுக்கே பதத்தறிவில்லை யெனச் சாதித்தல் பொருந்தாதென்பது புலனாகும்.

P. பரிமணப்பல்லவராயர்,
ஹெட்மாஸ்டர், போர்டு ஸ்கூல், உத்தமசேரி,
திருவளர்சோலை போஸ்டு, திருச்சி ஜில்லா.

---

குறிப்பு:—ஒருநாய் மூடியிருக்கும் கதவையுட்பக்க மிருந்து மனிதர் திறப்பதுபோலவே முன்னங்காலால் திறந்து விடுகிறது. ஒரு வீட்டின் சுற்றுச்சுவரில் இருக்கும் இரட்டைக்கதவு மூடப்பட்டுக் கீழே தாழ்ப்பாள் சொருகப்பட்டிருந்தது; இந்த நாய் அதைத் திறக்கக்கருதி தாழ்ப்பாளின் தலைப்புறத்தை வாயிற்கௌவி மேலுக்கிழுத்துக்கதவைத்திறந்து விட்டது. இது மனிதர்செய்வதைப் பார்த்திருந்து அப்படிச் செய்ததேயன்றி வேறில்லை, ஆரணி ஜாகீர்தாரிடமிருந்த ஒரு யானைப்பாகன் அடிக்கடி கடைக்காரரால் பரிசாக அளிக்கப்படும் தேங்காய்களை தன்யானையின் மத்தகத்தின்மேலேயே யுடைத்துத் தின்றுகொண்டிருந்தான். அதற்கு ஒன்றேனும் கொடுக்கவில்லை. ஒருநாள் அவன் ஒரு தேங்காயையுடைத்து ஒரு

முடியை நோண்டித்தின்று விட்டுத் தேங்காயோட்டைக் கீழெறிந்து விட்டான். யானை அவ்வோட்டையெடுத்து வாயில் அடக்கிவைத்துக்கொண்டது. மறுநாள் காலை பாகன் அந்த யானையை ஆற்றுக்கு ஓட்டிச்சென்ற போது வழியிலிருந்த ஒரு பள்ளத்தில் பாகனை யிழுத்துப்போட்டுத் தன் வாயில் வைத்திருந்த தேங்காயோட்டால் அவன் தேகத்தில் கீறி யவனைக் கொன்றுவிட்டது. பத்திரிகாசிரியர்.

## இல்லறம்—விக்கிரகாராதனை

(349-வது பக்கத் தொடர்ச்சி)

மனிதசக்தி யென்றது ஜீவசக்தியையேயாம். பரமாத்மாவின் சக்தி யதனுடன் கலந்து பிம்பங்களில் பிரவேசிக்கும். அப்பொழுதுதான் அந்த விக்கிரகம் தெய்வமென்று புகழ்ந்து கூறப்படுகின்றது. அதில் தெய்வ சாந்நித்திய மிருப்பதால் அதையே தெய்வமாக வழிபடுக வென்று பெரியோர்கள் கூறினார்கள். இதனால் மனம், ஆத்மா, சரீரம் மூன்றும் சுத்தியாகின்றன. ஆதலாலிதுவே மோட்சத்துக்குரிய சிறந்த மார்க்கமாம்.

இனி தெய்வ வழிபாட்டுக்குரிய ஆலயங்களைக் கவனிப்போம். பாசுபதம் (சிவாகமம்) பாஞ்சராத்திரம் என்ற நூல்களிற் கூறியபடியே ஆலயங்கள் கட்டப்படுகின்றன. அவ்வாலயமோ சரீரத்தைக் குறிப்பிக்கின்றது. சரீரத்திலுள்ள தத்துவங்களே இதிலடக்கிக் காட்டப்படுகின்றன. சரீரத்தில் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை யென்று கூறப்படும் ஆறுதாரங்கள் முக்கியமானவை. அவ்வாறே தேவாலயங்களிலும் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், ஸ்நபன மண்டபம், மஹாமண்டபம், பூர்வவேதி, சபாமண்டபம் என்ற ஆறுஸ்தலங்கள் முக்கியமாம். இவ்வாறும் ஆறுதாரங்களையே குறிக்கின்றன. ஆலயங்கட்டத் தொடங்குமுன் அந்தப் பூமி நன்றாய் உழுது சுத்திசெய்யப்படும். இந்த ஆலயத்துக்கு இதயஸ்தானம் போல விமானம் நிர்மிக்கப்படும். அதில் ஆதாரசக்தி முதல் துவாதசாந்தம் வரையிலுள்ள தத்துவங்க ளமைக்கப்படும். அந்த விமானத்தில் தெய்வசொரூபம் ஸ்தாபிக்கப்படுகின்றது. சரீரத்தை விர்த்தியாக்குவதும், இரத்தத்தைச் சுத்திசெய்வதுமான இதயஸ்தானத்தில் கடவுள் வழிபாடு விதிக்கப்பட்டதுபோல், இவ்வாலயத்திலும் இதயஸ்தானத்தில் கடவுளாராதனை விதிக்கப்பட்டது. இதயஸ்தானத்தைச் சுற்றிநிற்கும் இரத்தக்குழல்களை யனுசரித்து அதைச் சூழ ஒரு பிரகாரம் அமைக்கப்படும். அதில் வலமாகச் சுற்றிவந்து கடவுளைவணங்குவதே முறைமை. தெய்வசந்நிதியில் நந்திபிரானெழுந்தருளியிருப்பார். அவ்விடம் ஆக்கினைசக்கரமாம். தெய்வமிருக்குமிடம் பிரமரந்திரமாம். இவ்விரண்டுக்கும் நெருங்கின சம்பந்தமுண்டு. ஆதலால் நந்திக்கும் தெய்வத்துக்கும் மத்தியில் ஒருவரும் செல்லக்கூடாது. ஏதனாலென்றால் நந்திக்கும் தெய்வத்துக்கும் ஒன்றையொன்று கிரகிக்கும் சக்தியிருப்பதினால் அவ்விடம் தெய்வவியாபக நிறைந்த இடமாம். அதில் மனிதர்கள் புகுந்துசெல்வது கூடாதென்பது முன்னோர் கொள்கை. இதனால் தேவாலயம் சரீரம் போன்றதென்றும், அதில் பிரமாவுக்கு அறிகுறியாக லிங்கம் முதலிய திவ்யசொரூபங்களென்றும், ஜீவாத்மாவுக் கொப்பாகவே நந்தி முதலாயினோர் கருதப்படுகிறார்களென்றும் அறியவேண்டும். ஜீவாத்

மாவென்றது ஜீவாத்மாவுக்குப் பிரதிநிதியையாம். இதனால் ஆலயம் பரமாத்மாவுக்குச் சரீரம்போல்வதென்று விளங்கும். அதனாற்றான் அநேக பக்திமான்கள் ஆலயங்களைக் கண்டவுடன் கடவுளைப்போல வணங்கித் துதிக்கின்றார்கள். இவ்வாறு கட்டப்பட்ட ஆலயங்களினாற் பெரும்பயனுண்டாம். ஆஸ்திகனாயுள்ளவன் வெகுதூரத்திலிருந்து ஒரு கோபுரத்தைக் கண்டானானால் அவன் உடனே தெய்வத்தைத் தியானிக்கிறான். அக்கோபுரம் அவனுக்கு அந்தச் சக்தியையுண்டாக்கிற்று. பூஜாகாலத்தில் அடிக்கப்படும் மணி ஓசை, வாத்திய ஓசை முதலியவற்றைக் கேட்பதினாலும் தெய்வஞாபக முண்டாகின்றது. உற்சவகாலங்களில் போடப்படும் அதிர்வெடி சப்தத்தைக் கேட்டுப் பலர் தெய்வத்தைச் சிந்திக்கிறார்கள். இங்ஙனமும் ஆலயம் மனிதர்களுக்குப் பேருபகாரஞ் செய்கின்றது. ஆதலால் ஆலயம், பண்டிதர், பாமரர் எல்லார்க்கும் தெய்வ ஞாபகத்தை யுண்டாக்கி வழிபடுத்துகின்றது. இவற்றால் அதன் பெருமை அளவிலடங்காததேயாம்.

இனிப் பூஜையைப்பற்றிச் சிறிது கவனிப்பாம். பூஜை என்பது ஆன்மார்த்தம், பரார்த்தம் என்று இருவகைப்படும். ஆன்மார்த்தத்துக்கு ஸம்ஸ்காரங்கள் குறைவுபடும். பரார்த்தத்துக்கு ஸம்ஸ்காரங்கள் மிகுதியாம். இவற்றுள் ஆன்மார்த்தம் சரம் ஸ்திரமென்று இருவகைப்படும். சரம் என்பது நீர்நில முதலியவை. ஸ்திரமென்பது லிங்க முதலிய சொரூபங்கள். இப்பூஜைகளில் சிலையாலாகிய மூர்த்தியே சிறந்தது. சிலைக்கு அபிஷேகம் செய்யப்பட்ட நீரையுட்கொண்டால் அநேக நற்குணங்களுண்டாம். "சிலையோடு கலந்து சுத்தியான நீர் பத்தியமாகும்" என்று வைத்தியசாஸ்திரப் பரமாசாரியரான வாக்பட்டர் கூறினர். உலோகத்தாற் செய்யப்பட்ட பிம்பங்களில் வெள்ளி பொன்னாற் செய்யப்பட்ட விக்கிரகாபிஷேக தீர்த்தமும் நன்மையாக்கும். மற்றைய லோகங்கள் பயன் செய்யா.

ஆன்மார்த்த பூஜைக்குரிய பிம்பத்தை ஒருவனே பிரதிஷ்டை செய்வான். அவன் ஒருவனே அதைஸ்பரிசிப்பான். அவன் ஒருவனே ஆராதித்து வழிபட்டுத் தரிசிப்பான். ஆதலால் அப்பிம்பத்துக்கு அபிஷேகாதிகள் குறையும். பூஜைக்கென் றேற்பட்டுள்ள சுசியான இடத்தில், லோகங்களாற் செய்யப்பட்ட பாத்திரங்களையும், நற்குணமுள்ள பத்திர புஷ்பங்களையும், நன்றாய் வடிக்கட்டின தீர்த்தத்தையும் கொண்டு பூஜிப்பான். தன்மனம் ஒரு நிலையில் நிற்கும்பொருட்டுத் தனது வழிபடுதெய்வத்தைச் சிந்தித்துப் பிராணாயாமஞ்செய்து, மனதை வேறிடத்தில் செல்லாமல் நிறுத்தித் தான் செய்யக் கருதியிருக்கிற கைங்கரியத்தைக் குறித்துச் சங்கற்பஞ்செய்துகொண்டு பூஜை தொடங்கவேண்டும்.

அபிஷேக கலசத்தை முன்வைத்து அதை நீரால் நிரப்பிச் சந்தன புஷ்பாக்ஷதைகளை யதில் தூவித் தன் கையை அதன்மேல் வைத்துத் தன் சக்தியையு மதில் செலுத்தித் தேனுவாதி முத்திரைகளால் அநேக தீர்த்தாம்சங்களைச் சிந்தித்து அதில் பாவிப்பது வழக்கம். இந்த தீர்த்தமே அபிஷேகத்துக்குரியதாம். அன்றியும் வேறு ஐந்து கலசங்களை வைத்து நீர் நிரப்பிப் பத்திர புஷ்பாட்சதைகளால் பூசித்து வைக்கவேண்டும். பிறகு அவ்வித தேவதைக்குரிய மந்திரத்தை யுச்சரித்துப் பரம்பொருளைத்

தியானிக்கவேண்டும். மனதை யடக்கித் தியானிக்கும்போது பரம் பொருள் மனம் ஜீவன் மூன்றும் ஒன்றுபட்டுச் சரீரத்தையும், உலகத்தையும் மறக்கும்படி எப்போது பரவசமாகின்றதோ அச்சமையமே ஆவாஹனம் செய்தற்குரிய சமையமாம். அப்பொழுது துளசி, வில்வம் முதலிய தழைக ளைக்கையிலெடுத்துக்கொண்டு இதயம் முதல் சிரசுவரையும் மேல்நோக்கா கப் பாவித்துத், தன்னிடம் ஆவிர்ப்பவித்திருக்கும் பா பிரம சக்தியை அத் தழைகளின் மூலமாகப் பிம்பத்தில் செலுத்திக் கையாற்றொட்டு, இரு விழிகளாலும் நன்றாய் நோக்கவேண்டும். இப்படிச் செய்வதால் பரமான்மா அப்பிம்பத்தி லெழுந்தருளும். இவ்வாறு வந்த சக்தி யிதய கமலத்திலுள்ள அழுக்குகளுடன் கலந்து வந்திருக்குமாதலால் முன் பூஜித்து வைத்திருக் கும் கலச தீர்த்தத்தால் அபிஷேகம் செய்யவேண்டும். அப்பொழுது அசு த்தம் நீங்கும். பிறகு முன் பூஜை செய்து வைத்திருக்கும் பஞ்ச கலசநீரால் அபிஷேகித்து ஈரம் புலாத்துடைத்துப் பருத்தி பட்டுகளால் செய்யப்பட் டனவும், பிறரால் தொடப்படாதனவுமான வஸ்திரங்களைச் சாத்திச் சந்த னமிட்டுப் பத்திர புஷ்பங்களால் அர்ச்சனை செய்யவேண்டும். பின் வீடு முழுவதும் பரிமளிக்கும்படி சாம்பிராணி முதலியவற்றால் தூபங் காட்ட வேண்டும். தீபோபசாரஞ் செய்து, புதிதாய்ச் சமைக்கப்பட்டவைகளை நைவேத்தியம் செய்து கற்பூராரத்தி காட்டிப் பிரதட்சிண நமஸ்காரங்கள் செய்து ஸ்தோத்திரம் செய்து தனதிஷ்டார்த்த சித்தியாம்படி பிரார்த் தனை செய்யவேண்டும். இதுவே யான்மார்த்த பூஜையாம். இப்பூஜையால் பூஜை செய்கிறவர் பயன் பெறுகிறதுமன்றி வீட்டிலுள்ள சகல பிராணி களையும் பயன்பெறச் செய்கிறான். அது முன்னரே கூறினோம்.

பரார்த்த பூஜை ஆலயங்களில் செய்யப்படுவது. ஆலயத்தில் ஸ்தா பிக்கப்படும் பிம்பத்தின் பெருமையை முன்னரே கூறினோம். இது தனக் குப் பயன்படும் பொருட்டுக் கிரகத்துக்குள் இரகசியமாகச் செய்யப்படா மல், பல ஜனங்களும் ஈடேறும் பொருட்டுப் பொதுவிடமாகிய ஆலயங் களில் நடத்தப்படுவதனால் இது பரார்த்த பூஜை யென்று பேர் பெற்றது. வேதத்தில் "தேவர் உள்ள தேரை யிழுப்பவன் பாவத்தினின்றும் விடுபடு வான்" என்ற வசனமும் உண்டு. இத்தகைய பெரிய பிரமாணங்களை ஆதாரமாகக் கொண்டே அநேக ஆரியப் பெரியோர்கள் ஆலயங்களிற் சென்று தேவனைப் பிரார்த்திக்கின்றனர்கள். இவ்வாலய தரிசனத்தாற் பலனுண்டென்பதை யெளிதில் அறியலாம். ஒரு தகட்டை யடித்து அதில் எழுத்தமைத்து ஆலயத்துக்குக் கொண்டுபோய் விக்கிரகத்தின் பாதத்தில் வைத்துச் சிலகாலம் பூசித்துச் சங்கரதோஷம் கொண்ட பெண்ணுக்குக் கட்டினால் அவளிடத்திலுள்ள பேய் பிசாசுகள் ஓடிப்போவதைப் பிரத்தி யட்சமாகக் காணலாம். காளியம்மன் முதலிய தேவி சந்நிதிகளில் கத்தி வெட்டு முதலிய துன்பமும் செய்யாமலிருப்பதும், கல்லடி உபத்திரவம் செய்யாமலிருப்பதும் பிரத்தியட்சம். சில சந்நிதிகளில் தீ சுடுவதில்லை. சில சந்நிதிகளில் காத்திருப்பதினால் தீராத கன்ம வியாதிகளுந் தீர்வதும் பிரத்தியட்சம். சிந்தையைச் சிதற விடாமல் ஒரு மண்டலம் தேவனைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து ஆராதிக்க இஷ்ட சித்தி கைகூடுவது கண் கூடு. உண்மையான சில பக்தர்களுக்கு அவர்கள் தரிசிக்கும் விக்கிரகமே சொற்பனத்தில் வந்து இதம் கூற அது சாக்கிரத்தில் பலிப்பதும் பிரத்தி

யட்சம். பரிபாக முதிர்ச்சியுடைய பெரியோர் அதனைப் பரப்பிரமமாகவே கருதி வழிபட்டு மோட்சானந்த மடைவதும் அவர் வாயாற் கேட்டறியலாம். இன்னம் அளவு கடந்த பிரத்தியட்சமுண்டு. இதனை நமது ஜனங்கள் அறிந்திருப்பார்களாதலால் விஸ்தரிக்க வேண்டியதில்லை. இத்தகைய மகிமை வாய்ந்த விக்கிரகாராதனை நமது பெரியோர்களாற் சம்பாதித்து வைக்கப்பட்டுள்ள சேமநிதி போல்வதாம். இதனை அலட்சியம் செய்யாமல் கைக்கொண்டு நடந்துவருவது நமது முக்கிய கடமைகளிலொன்றாம். ஸ்மிருதி புராண இதிகாசங்களில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளவைகளையென தறிவிற்கு எட்டினமட்டும் எடுத்துக் காட்டினதேயன்றி, எமது சொந்தப் புத்திகொண்டு கூறியது ஒன்றுமில்லை. அநேக வேதவாக்கியங்களையு மெடுத்துக் காட்டினோம். இதில் ஐயங் கொள்ளாமல் அனுஷ்டிப்பவர்கள் பெரும் பேறு பெறுவதில் ஆக்ஷேபனை யில்லை. விசேஷமாக யதார்த்த குணங்களாகிற பிரத்தியட்சப் பிரமாணங்களை யாதாரமாகக் காட்டி யெழுதப்பட்டுள்ளபடியால் யதார்த்த சோதகர்கள் அதனுண்மையை யுணர்ந்துகொள்வார்க ளென்பதி லையமில்லை. இத்தகைய விக்கிரகாராதனையை யிகழாதனுஷ்டித்து இம்மை மறுமைப் பயன்களை யடைந்து ஜீவாத்மாக்களுய்யுமாறு செந்திலாண்டவன் திருவடி பணிவோமாக.

விக்கிரகாராதனை முற்றும்.

---

## பக்தி.

"எண்ணரிய பிறவி தனின் மானிடப் பிறவி தான் யாதினும் அரிது அரிது காண், இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ, எது வருமோ அறிகிலேன்," என்று நம் தாயுமானவர் திருவாய் மலர்ந்தருளியவாறு, எண்ணுதற்கரிய பிறவிகளாகப் பிறந்து, கடைசியில் ஜீவன் மானிடத்தை அடைகிறான். இம்மானிடப் பிறவிக்கும் மற்ற பிறவிகளுக்கும் உள்ள வித்தியாசமென்ன வெனில், மற்றபிறவிகளில் ஜீவன் தனக்கு இயற்கையாய் அமைந்துள்ள செய்கைகளைச் செய்கிறான். ஆனால் மானிடப் பிறவியில் ஜீவன் உலகத்திலுள்ள சராசர வஸ்துக்களில், இது சத்து, இது அசத்து, இது நன்மை, இது தீமை, இது பாவம், இது புண்ணியம், இது தர்மம், இது அதர்மம், என்று பகுத்தறிந்து கொண்டே போய், இவ்வுலகத்திற்கு மூலகாரணமாயும், சாசுவதமாயும் ரூபா ரூபமற்றதாயும், இரண்டற்ற ஒருவராயும், காண்டற் கரிய வஸ்துவாயும், அங்கு, இங்கு, எனாதபடி எங்கும் பிரகாசமாயும், ஆநந்த மயமாயும் இருக்கிற அப்பராபர சச்சிதானந்த சொரூபமாகிய எம்பெருமானை, ஒப்பற்ற கடவுளை, அன்போடு போற்றி, மனதாரத் துதித்து, வாயாரத் திருநாமங்களைச் சொல்லி, காதில் அவரது திருவிளையாடலாகிய லீலைகளைக் கேட்டுக் கையாற்றொழுது, இம்மானிடப் பிறவியாகப் பிறந்ததின் பலன் ஸ்ரீமத் சாக்ஷாத் சிவபெருமான் திருவடி நிழலில் கலந்து, பரமசாயுச்சியத்தை அடைய வேண்டுமென்ற இவ்வொன்றையே தான் தெரிந்து கொள்கிறான். அப்பேர்க்கொத்த கருணைக் கடலை அடைவதெப்படி? அதற்கு மார்க்கம் தேடுவதுதான் மானிடப்பிறவியின் முக்கியமான வேலை.

ஜீவன் மானிடனாய்ப் பிறந்து, சம்சார மென்னும் சமுத்திரத்திற் கலந்து, மனமென்னும் சுழற்காற்றினால் அலைப்புண்டு, ஆசையென்னும் பல அலைகளினால் மோதத் தாக்கப்பட்டுத் தத்தளிக்கும் இத்தகைய சங்கடத்தினின்று மோக்ஷமென்னும் கரை யேறுவதெப்படி? ஆனால் கடவுள் கரையிலேற்றி விடுவாரா? அப்படியானால் நாம் எவ்விதம் நடந்துகொண்டால் அப்பத மளிப்பார்? என்று பலவாறு யோசிப்போமாகில் ஒரே நெடுவழி ஒன்று தான் புலப்படுகிறது. அது என்னவெனில் நாம் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி, மனதை ஒடுக்கி, சித்தத்தை மூடுக்கி, முழு உண்மையான மனதோடு கடவுளைத் தியானித்து அதினின்று நமக்குக்கடவுளிடத்தில் உண்டாகும் அன்பு என்பது தான் "பக்தி" என்று சொல்லப்படும்.

இத்தகைய பக்தி என்று சொல்லப்படும் வலை ஒன்றுக்குத்தான் கடவுள் சிக்குவார். பக்தனுடைய மனதில் ஐக்கியப்பட்ட கடவுள் அன்பர்க்கு அன்பனாயும், அடியார்க்கு அடியனாயும் தன் பக்தன் திருவுளம்போல் நடந்து கொண்டுவருவார். அப்படி பக்திசெய்து கடவுளது பரமபதத்தை அடைந்தவர்கள் யாவரேனும் உளரா என்று விசாரிக்கும்போது, அதற்கு அளவிலா உதாரணங்கள் இருக்கின்றன.

ஒவ்வொரு பக்தரும் எவ்வித பக்திசெய்து பரமசாயுச்சியத்தை அடைந்தனர் என்பதைப்பற்றிக் கல்வியறிவுடைய பெரியோர்களால் முன்னமே, சொற்சுவை, பொருட்சுவை, அந்தரங்க அர்த்தம் முதலியவைகளோடு பல நூற்கள் எழுதப்பட்டுள்ளன வாதலானும் இங்கு மீண்டு கூறுவது அசாத்திய மாதலாலும் அப்படிக் கூற முன்வரினும் அவைகளைப்போல் அமையாது என்பதற்கு அஞ்சி விடுத்தாம். ஆனால் அப்பக்த சிகாமணிகளுடைய திருநாமங்களை மாத்திரம் சொல்லலாம்.

பெரிய புராணத்திலுள்ள அறுபத்து மூவர், அவர்களுள் பிரக்யாதி பெற்ற நால்வர், தாயுமானவர், சங்கராச்சாரியார், கஜேந்திரன், நந்தனார் மார்க்கண்டேயர், இன்னும் கபீர்தாஸ், இராமதாஸ், துளசிதாஸ், புரந்தரதாஸ், பிரஹலாதன், துருவன், பக்த விஜயத்திலுள்ளவர்கள், ஆழ்வார்கள், அனுமார், இராமானுஜர் முதலிய பல சிரோன்மணிகளேயாவர்.

மேற்சொன்னவர்களது ஜீவிய சரித்திரத்தை வாசிக்கும்போது, கடவுள் தமது பக்தர்களுக்கு ஈடுபட்டு என்னென்ன காரியார்த்தங்கள் செய்தார் என்பது நன்கு விளங்கும்.

இவ்வித பக்தியைப் பெரியோராயினுஞ்சரி சிறியோராயினுஞ்சரி, கல்லாதவர்களானாலுஞ்சரி கற்றறிந்தவர்களானாலுஞ்சரி, நல்லாரானாலுஞ்சரி பொல்லா ரானாலுஞ்சரி எல்லாரும் செய்யவேண்டியதே. அதற்குவரம்பு கிடையாது. இதற்கு உதாரணங்கள், வயதிற் சிறியவர் துருவன், மார்க்கண்டன், பிரஹலாதன். கீழான ஜாதியில் நந்தனார். கல்லாதவர்களில் கண்ணப்பர். பொல்லாதவர்களில் இராவணன். தான் இமயகிரியைப்பெயர்த்தபொழுது நீலகண்டன் தனது பெருவிரலை அழுத்த அதனால் கஷ்டப்பட்டவனாய்த் தனது நரம்புகளினால் வீணாநாதத்தில் சாமவேத கீதம்பாட அதற்குப் பசுபதி உடனே திருவுளமிரங்கி விடுவித்தது மன்றி அதர்மன் என்று தெரிந்திருந்தும் வரங்களைக் கொடுத்தனுப்பினார் என்று கூறப்பட்டுளது.

கடவுளுடைய வாசம் பக்தர்கள் இருதயத்தில்தான். அந்தோ பக்தியின் மகிமையும், அதன் பெருமையும், அதன் சீர்மையும், அதன் தகைமையும், பகாலரிது. அதைக் கடைப்பிடித்தவரை மோக்ஷமென்னும் கரையேற்றுவதில் அது தோணிபோலவும், உலகமாகிய வீட்டை விட்டு மோக்ஷமென்னும் பேரின்ப வீட்டிற்கு ஏறிச் செல்வதற்கு ஏணிபோலவும், ஆநந்த மயமாகிய கடவுளைத் தரிசிப்பதற்கு ஏற்படுத்திய நெடுவழி போலவும் உதவிபுரிகின்ற இத்தகைய பக்தியின் பெருமையை அளவிட்டுஞ் சொல்லக் கூடுமோ.

ஆகையால் மானிடராய்ப்பிறந்த ஒவ்வொருவரும் இப் பிறப்பில் தவருது பக்தி செய்து இச்ஜென்மம் சாபல்யமாகும் வழியைத் தேடவேண்டும். இது இச்சமயம் தவரின் மறு சமயம் வாய்ப்பதரிது. இதனுல்தான் "இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ" என்ருர் தாயுமானவர். "பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை, அருளிலார்க்கு அவ்வுலகமில்லை" அருள் ஒன்றே மாந்தர்க்கு இன்றியமையாத தான பொருள்; அது ஒன்றே முத்தியளிக்கும்.

நாம் எடுத்த இம்மானிட ஜென்மம் வீணுகாவண்ணம், நமது வாழ்நாளை வீணுளாக்காமல், தினந்தோறும் உள்ளன்போடு கடவுளைப் பக்தி செய்து காலாந்தரத்தில் அவருடைய திருவடியை அடையவேண்டும்.

சர்வ பரிபூரண அகண்ட தத்துவமான அச்சச்சிதானந்தப் பரம்பொருள் நமக்கு பக்தி வழிகாட்டி அருள் புரிவாராக. சுபம்.

பூ. அமிர்தலிங்கம்.

---

## ஐய வினவுக்கு ஆனந்தமான விடை

நண்பர்காள்! சித்தார்த்தி௵ கார்த்திகைமீ௴த்தில் வெளியான, நம் ஆனந்தனில் ஓர் ஐயவினு என்னும் முகுடம்புனைந்த விஷயத்தை 174-வது பக்கத்தில் பிரசுரம் செய்திருந்தது யாவருமறிந்த விஷயம்.

நேயர்களே! என் சிற்றறிவிற்கெட்டியவாறு யான் அவ்விஷயத்திற்கு விடை யெழுதுவதில் யாது குற்றமிருப்பினும் குறை கூருது பொருட்படுத்துவீர்களென்று எழுதலாயினேன்.

நம் மானந்தனில் சென்ற வருடம் கார்த்திகைமாதம் பிரசுரித்திருந்த விஷயத்திற்கு யாராவதொரு பெரியோர் விடை யெழுதுவார்க ளென்று இது வரையில் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஏனென்ருல் யான் அப்பெரிய விஷயங்களுக்கு விடையெழுத என் சிற்றறிவிற் கெட்டாதென வாளா விருந்தனன். இவ்வரிய விஷயங்களுக்குக் கற்றறிந்த பெரியோர்களே விடையெழுதாமலிருந்தால் நம் சைவ ஆகம சாஸ்திரங்களெல்லாம் அனியாயமாய் மறைந்து போய்விடு மெனக்கருதி ஒருவாறு எழுதத் துணிந்தேன். அவை அடியில் வருமாறு:—

சிவாலயத்திற்குள் விஷ்ணு ஆலயமிருந்தாலுஞ்சரி, அல்லது வேறு ஆலயங்களிருந்தாலும் சரி, சிவ உற்சவகாலத்தில் அன்னிய உற்சவம் செய்யக் கூடாதென்று (அம்சுமதி) என்னுஞ் சிவாகமத்தில் அநேக பாகங்களிற் கூறப்பட்டிருக்கிறது. அது பின்வருமாறு:—

சிவோத்ஸவாரம்பகாலே நேஷ்ட மன்யோத்ஸவம் குக
அந்யதேவொத்ஸவேகாலே மஹாதேவோத்ஸ்வம் க்ருதம்
புனருத்தோன்ய தேவானும் உத்ஸவே நதோஷபாக்
தஸ்மாச்சிவோத்ஸவே மத்யே ஆரப்தே ஸர்வதோஷபாக்
காரயேத்யதி மோஹேன வியாதிகோத பயம்பவேத்
நகரேபட்டணீ வத்ஸ ராஜதானே ததைவச.

சிவோற்சவ காலத்தில் அன்னிய உற்சவம் செய்யக் கூடாதெனவும், அன்னிய உற்சவகாலத்தில், சிவோற்சவம் செய்யலாமெனவும் சொல்லி யிருக்கிறபடியால் இவ்விஷயங்களை உணராது சிவோற்சவகாலத்தில் அன்னிய உற்சவம் செய்தானேயானல் கொடியவியாதியாலும் பஞ்சத்தாலும் பீடிக்கப்பட்டு ஜனங்கள் கஷ்டப்படுவார்களென்று நம் மாகமங்களிற் சொல்லப்படுகிறது.

அன்பர்காள்! நம் சாத்திரங் கூறியதற்கேற்பத் தற்போது நடந்த வற்றையும் பிரத்தியக்ஷமாக எல்லோரும் உணரும் பொருட்டு ஷை. ஐய வினு என்னும் கேள்வி கேட்டவரே மிகவுந் தெளிவாய் விளக்கி யிருக்கிறார்.

நிற்க இவ்விஷயங்களுக்கு மிகவும் விரிவாக எழுதலாமென்றால் நம் மானந்தனில் இடந்தராது. இக்குறை நம் சந்தாதாரர்களா லேற்பட்டதே யொழிய வேறொன்றுமில்லை. நம் சந்தாத் தொகையைச் சிறிது உயர்த்தினல் நம் மானந்தனுமிடந்தரும். விரிக்கிற் பெருகும்.

சுபம், சுபம், சுபம்.

சென்னிகிரி பண்டிதர்,
சென்னிமலை.

---

## கடிதம்.

### (தாயுமானவர் அடைந்தகாலம்.)

ம-ா-ா-ஸ்ரீ பத்திரிகாசிரியரவர்களுக்கு.

ஐயா,

தங்கள் "ஆனந்தனை" நான்கு வருஷமா யனுபவித்து ஆனந்தித்தவர்களில் யானு மொருவன். சில விஷயங்களை யெழுதி "ஆனந்தன்" வாயிலாக வெளிப்படுத்த மிகுந்த அவா இருந்தும் (ஊழ் கூட்டும்படிக் கன்றிக் கூடாவாம்) என்றபடி பிராரப்தம் இடம் கொடுக்க வில்லை.

இப்போது ஆனந்தபோதினியின் நாளது மாசிமீ" த்திய சஞ்சிகையின் 310 பக்கத்தில் தாயுமானவர் சரிதையைப்பற்றி வரையப்பட்டுள்ளதில் தாயுமான சுவாமிகளின் பரிபூர்ண தசைகாலத்தைப்பற்றி எனக்குத் தெரிந்தவரையில் எழுதுகிறேன். எனக்குக் கணித சாஸ்திரத்தில் கொஞ்சம் பரிச்சய முண்டென்பதையும் தெரிவிக்கிறேன்.

தாயுமானவர் பரிபூர்ண தசையைப்பற்றி இரண்டு மூன்று வருஷத்திற்கு முந்திய மெட்ரிகுலேஷன் பாடபுத்தகத்தின் உரையில் எழுதப்பட்டிருக்கிறது. அதன் டைடில்பேஜ் இல்லாமல் என்னிடம் அகப்பட்டதால் இன்னரால் இன்ன வருஷம் அச்சிடப்பட்டதெனத் தெரியவில்லை. அந்தப்

புத்தகத்தில் தாயுமானவர் அடைந்த காலம் கலியப்தம் 4762, சாலிவாஹன சகாப்தம் 1584, (இங்கிலீஷ் 1662 பிப்ரவரி) சுபகிருதுஞு தைமீ 23௳ புதன்கிழமை அஷ்டமி 45-5, விசாகம் 60 அன்று அர்த்த மண்டல சமயத்தில் என்றிருந்தது. "துகளறுசாலிவருடமாயிரத் தைஞ்ஞூற் றென்பானுன்கினிற் றொடரும்—மிகு சுபகிருது வருடந் தை மாதம் வெண்மதிமைந்தன் நாள் விசாகம்—மகிமைசேர் பூர்ணதிதியினில ருத்த மண்டல சமயத்திற் கங்கைத்—திகழ் கரையதனிற்றாயு மானவர் தாஞ் சிவத்தினிற் கலந்த நற்றினமே" என்ற கவி மிகப்பிழைபட்டுளது.

மதிவார நாளென்று காணப்படுகிறது. பூரணதிதி விளங்கவில்லை. விசாக நக்ஷத்திரத்திற்குரிய தினத்தை கணித்துப் பார்த்ததை மேலே காட்டியுள்ளேன். சிலர் சோபகிருதுஞு வைகாசிமீ விசாக நக்ஷத்திரம் எனக் கூறுகின்றார்கள். அங்ஙனம் கொள்வதற்கு, தாயுமானவர் சித்தி யடைந்த இடத்திலெழுப்பிய கோயிலிலுள்ள கல்வெட்டு சாலீவாஹன சகாப்தம் 1584-க்குச் சுபகிருதுஞு தைமீ சோமவாரம் விசாக நக்ஷத்திரம் என்றெழுதப்பட்டுளது. அதற்கு மாறாக ஒன்றும் கூறல் தகுதியில்லை. சோமவாரம், லௌம்ய வாரமென்றிருந்தால் பாதிக்காது அறிவுடையோர் ஆராய்வாராக என்று முடித்திருக்கிறார்.

நான் கணித்துப்பார்க்க மேற் கண்டவை சரியாயிருக்கின்றன வாயி னும் இன்னு மொன்றுளது.

அதாவது, புலவர் புராணம் என்று ஓர் புத்தகத்தின் அச்சிட்ட ஓர் பாரம் 8 பக்கம் என்னிடம் அகப்பட்டுளது. அதாவது, 113-வது பக்கம் முதல் 120 பக்கம் வரை. அதில் தாயுமான சுவாமிகள் கோயிலிலுள்ள கல் வெட்டினால் அவர் தேகவியோகமான காலம் சாலிவாஹன சகாப்தம் 1584, சுபகிருதுஞு தைமீ திங்கள்கிழமை ஆயில்ய நக்ஷத்திரத்தில் என்று தெரிகிறது. இதனையே கொண்ட இவரது சரம கவியொன்று வருமாறு என்று மற்றைய அடிகளெல்லாம் மேலெழுதிய கவியின்படி யெழுதப் பட்டு இரண்டாவது அடியில் தைமீ வெண்மதி வார நாளாயின், மகிமை சேர் என்று எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இவைகள் நிற்க,

நான் பரிசோதித்தவளவில் அவ்வருஷத்தில் திங்கட்கிழமை பூர்ணிமை ஆயிலியம் வரவில்லை. ஷை சுபகிருதுஞு தைமீ 14௳ திங்கட்கிழமை சதுர்த்தசி 35-49-க்கு மேல் பௌர்ணமை, புனர்பூசம் 40-22 க்கு மேல் பூசம் கணித்ததால் கிடைத்தது. 16௳ புதன்கிழமை ஆயில்யம் கிடைக்கின்றது. ஆனால் பௌர்ணமையில்லை. மேற்சொன்ன இருவரின் கல்வெட்டில் எது நிஜமென்பதை இராமநாதபுரத்தி லுள்ளவர்களாலோ அல்லது, நேரிலோ பார்த்தறிய வேண்டியதாயிருக்கிறது. அவ்விஷயம் "ஆனந்தன்" வாயிலா கவே ஒரு சமயம் கூடிய சீக்கிரம் வெளியாகலாமென்று நினைக்கிறேன்.

எந்தக்காலத்திலும் தைமீ பௌர்ணமையினன்று விசாகநக்ஷத்திரம் வாராதென்பது உண்மையே யாகும். அதை யெழுதியவர் அவ்வளவு வரை ஆராய்ந்தே எழுதியுள்ளார். ஆனால் இது சாதாரணமாய்க் கொஞ்சம், நக்ஷத்திரம் இராசி கிரஹங்களைத் தெரிந்தெண்ணக் கூடிய எல்லா ஜோதி ஷர்களும் சுலபமாய்ச் சொல்லக் கூடியதேயாம்; தெரியாதவர்களும் சொன்னால் சுலபமாயறிந்து கொள்ளக்கூடும். நான் முன்னமேயே தாயு

மானசுவாமிகள் சரித்திரத்தை வாசித்ததில், சரித்திரத்தை மாத்திரம் வாசித்தேனே யொழிய இவைகளைக் கவனிக்கவில்லை.

"ஆனந்தனின்" புரட்டாசிமீ சஞ்சிகையின் 167-வது பக்கத்தில் கண்ட கவியில் (ஆயிரத்தைஞ்ஞூற்றெண் பத்தொன்று என்றது சரியல்ல. அதற்கு விகாரி வருஷ மாகிறது. 1584 என்பதுதான் சுபகிருது வருஷ மாகும். இதையறிவதற்கு வேறு கணிதம் வேண்டியதில்லை. இப்போது சென்ற சுபகிருது வருஷத்திற்கு சாலீவாஹன வருஷம் 1824-கலியுகாதி வருஷம் 5003. இதில் மேற்கண்ட சாலீவாஹன வருஷம் 1584 கலியுகாதி வருஷம் 4763 இவைக்களைக் கழித்தால் 240 வரும். இதை 60ஞல் வகுக்க சரியாய்விடும். இதைத்தவிர வேறுகணிதாதாரங்களுமுண்டு. அதை விரிவாய் எடுத்துரைக்கவேண்டுமாயினும் நன்றாய்ப் புலப்படும்படி கூறலாகும். இதிலுள்ளவை கல்வெட்டிலுள்ள ஆயிலியம் விசாகம் என்பதே பெரும் சந்தேகம். இதை அறிவுடையோர் நேரில் ஆராய்ந்து தெரிவிப்பார்களாக.

சி. சங்கர நாராயண ஐயர், ஜோதிஷன்,
பொய்யாண்டா கோட்டை, கோனூர், வல்லம் போஸ்டு.

குறிப்பு:—இராமநாதபுரத்திலுள்ள நமது சந்தா நேயரில் எவரேனும் அல்லது இராமநாதபுரம், வெளிப்பட்டணத்திலுள்ள தாயுமான சுவாமிகள் மடாதீனம் ஸ்ரீமத் ஆறுமுகதேசிக சுவாமிகளாவது தாயுமான சுவாமிகளின் சமாதியிலுள்ள கல்வெட்டிலிருக்கும் விஷயத்தைத் தெளிவாய் எழுதி யனுப்புமாறு மிகவும் பிரார்த்திக்கிறோம். அதோடு மேற்படி சுவாமிகள் தாயுமான சுவாமிகள் பரிபூரண தசையடைந்த காலநிர்ணயத்தைப் பற்றித் தமது அபிப்பிராயத்தைத தெரிவிக்குமாறு பிராார்த்திக்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## பெண் கல்வி.

'எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு'

என்ற தமிழ் மறையின்கண் 'உயிர்க்கு' எனப் பொதுப்படக் கூறப்பட்டமையானும், நாலடியாரில் 'மஞ்சளழகும் அழகல்ல' எனப் பெண்களுக்கே சிறப்பாகவுடைய 'மஞ்சள் குறிப்பிடப் பட்டமையானும், ஆண்மக்களுக்குக் கல்வி யெப்படி அவசியமோ அப்படியே பெண்மக்களுக்குங் கல்வி யின்றியமையாததென நன்கு விளங்குகிறது. பெண்களுக்குக் கல்வி கட்டாயம் வேண்டுமென்று கூறுவதுடன் நில்லாது, அன்னோர் கல்வியை யபிவிருத்தி செய்யப் பல பள்ளிக்கூடங்களை நிறுவியும், பெண்களைப் பள்ளிகளுக்கு அனுப்புமாறு பெற்றோர்களைத் தூண்டியும் வராநிற்கின்றனர் ஒரு சாரார். அதனினும் எண்ணிக்கையிற் குறையாத மற்றொரு சாரார், 'அடுப்பூதும் பெண்டிர்க்குப் படிப்பேன்' கற்பை யிழப்பதற்குக் கல்வியே காரணம்' என்று பலவாறு பேசி, பெண்களுக்குக் கல்வி ஒழுக்கத்தைக் குறைத்து அடங்காத் தனத்தை யபிவிருத்தி செய்யுமென்று பெண்களைப் பள்ளிக்கு அனுப்பலாகாதெனக் கூறி வருகின்றனர். இருதிறத்தாருடைய கூற்றும்

எம்மட்டில் உண்மையென்பதை அளவிலா வானந்தத்தை யுண்டாக்கும் நமது ‘ஆனந்தனைப்’ படிப்போரே அறியலாம். இருவர் கொள்கையிலும் சிறிது உண்மை யிருந்தே தீரவேண்டுமென்பது என்னுடைய சித்தாந்தம். பெண்களுக்குக் கல்வி யின்றியமையாத தென்பதைப் பல மேற்கோள்களுடன் பல கற்றோர் நமது ஆனந்தனிலேயே நிரூபித்தாராதலின் அதையே யானும் எழுதத் துணிந்தேனல்லேன். ஆனால் பெண்களுக்குக் கல்வி நன்மை பயக்கின்றதா அல்லது தீமை யுண்டாக்குகிறதா என்னும் விடயத்தை மட்டுமே ஆராயப்புக்கேன். ஆராய்ச்சியின் கண் காணப்படும் பல குற்றங்களை நீக்கிக் குணத்தைக் கொள்ளுமாறு பிரார்த்திக்கின்றனன்.

கல்வியால் பெண்கள் கற்பை யிழக்கின்றனர் என்னுங் கூற்றில் ஒருவாறு உண்மையும் ஒருவாறு பொய்ம்மையு முள்ளதெனவே கூறலாம். படித்த பெண்களெல்லாம் தங்கள் கணவரை விட்டு ஒழுக்கமற்றிருப்பதாகக் காண்கிலோம். அதற்கு மாறாகப் படியாத பெண்களில் எத்தனையோ பேர் தங்கள் கணவனை விட்டும், கணவனோடிருந்தே கற்பைக் கனவிலும் நினையாது சற்றும் ஒழுக்கமற்றவராகவு மிருககக் காண்கிறோம். ஆகையால் மேற்கூறிய கொள்கை முழுதும் உண்மையெனக் கூற இயலவில்லை; முழுதும் பொய்யெனவும் கூற இயலவில்லை. ஏனெனில், படித்த பெண்களில் பலர், தங்கள் கணவர் வெளியில் சென்று, தங்களின் பொருட்டு வேர்வை சிந்த வெயிலில் கஷ்டப்பட்டு வீட்டிற்குத் திரும்பி வருங்கால், அவர்களுக்கு வேண்டிய உபசரணை செய்யாது அவர்களுக்கு மனவருத்தமுண்டாகும்படியாகச் சாய்வு நாற்காலியிற் படுத்து நாவல்களைப் படித்துக் கொண்டிருக்கின்றனர். வெயிலில் களைத்து வந்த புருஷன், ‘கால் கழுவதற்குக் கொஞ்சம் தண்ணீர் கொடுக்கலாகாதாவென்று கேட்டுவிட்டாலோ, போ, நிரம்ப சிரமப்பட்டு வந்துவிட்டாயோ, நான் இவ்வளவு நேரம் அடுப்பண்டைக் கஷ்டப்பட்டது ஈசுவரனுக்கே தெரியும்; உன்னை விவாகம் செய்துகொண்ட நாளே எனக்குப் பிடித்தது சனியன்; என் படிப்பெல்லாம் போச்சுது. எங்கள் தாயார் வீட்டில் எனக்கு ஏதாவது வேலை யுண்டா. சுகமாகப் படித்து வந்தேன். இங்கு வந்தது முதல் புத்தகம் எடுத்தால் உங்கள் கண்ணில் கொள்ளி வைத்ததுபோலாகிறது. இஷ்டமிருந்தால் சொல்லும். இல்லாவிட்டால் நான் எங்கேயாவது இப்பொழுதே ஒழிந்து போகிறேன்’ என்று ஆரவாரம் செய்கின்றனர். கணவனே தெய்வமாகக் கொண்டு, கூப்பிட்டவுடன் பாதிக் கிணற்றிலேயே பாத்திரத்தை விட்டோடிவந்த பதிவிரதையாம் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் மனைவி வாசுகியின் சரித்திரம் படித்திருப்பின் இவ்வாறு கூறுவரா. ஆனால் மேற்கூறிய பெண்கள படித்ததென்ன. ‘நாட்டு எலியும் நகரத்து எலியும்’ என்ற கதையும், ‘நடுவேனிற்காலம்’ என்னும் ஷேக்ஸ்பியர் ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பும், வீட்டிற்கு வந்தவுடன் ‘சந்திரகாந்தா’ என்னும் நாவலுமே. இவைகளை யெல்லாம யான் படிக்க வேண்டாமென்று கூறவந்தேனல்ல. ஆனால் இப்படிப்பு எம்மட்டில் அவர்களுக்குப் பயனைத் தந்தது என்பதுதான. இமமட்டுமா! எத்தனையோ படிதத பெண்கள் ‘நாகரீகம்’ ‘நாகரீகம்’ என்று கூறிக்கொணடு மேல்நாட்டுப் பெண்களைப்போல் தாங்களும் நடக்க வேண்டுமென்று, குடும்ப வேலைகளை விட்டு, கூட்டங்கள் கூடுவதிலும், சுய ஆட்சி கேட்பதிலுங் காலத்தைக் கழிக்கின்றனர். சிலர்

அந்தோ! தம் கணவருடைய பணம் சம்பாதிக்கும் கஷ்டத்தை அறியாதாராகி, அவரிடமிருந்து பகற் கொள்ளைக்காரர்கள் போல் பறித்து, வீட்டில் யாசகத்திற்கு வந்தால் ஒரு பிடி அமுதுங்கொடுக்க மனமில்லாதவர், பட்டுச் சேலை வாங்குவதிலும், நாடகங்கள், அசை காட்சிகள் பார்ப்பதிலும் பணத்தைச் செலவு செய்கின்றனர். பட்டுப் புடைவைகள் கட்டலாகாதென்றும், நாடகங்கள் பார்க்கலாகாதென்றும் யான் கூறவந்தேனல்ல. பணம்மிகுதியுமுடையவர் தாராளமாகச் செய்யலாம். இவ்வாறு சில தனவந்த ஸ்திரீகள் செய்வதைப் பார்த்து, 'புலியைப் பார்த்து பூனை சூடுண்டது போல்' ஏழை மாதுகளுந் தாங்களும் அவ்வாறிருப்பதே தற்கால நாகரீகமென்று கணவர்களுக்குப் பல தொந்தரைகளை உண்டாக்குகின்றனர். இவ்வாறுன போலிக் கல்வி கற்ற மனைவிமார்களுக்குப் பயந்து எத்தனையோ பெயர் மனம் சலித்து இல்லறவாசைவிட்டுச் சந்நியாசியாகிவிடுகின்றனர் என்றால் அவர்களைவிடக் கூற்றுவர் வேறுண்டோ. இதுதானு நாகரீகம்! இதற்காகத் தானு நாம் பெண்மக்களைப் படிப்பிப்பது! ஆனல் இதையே காரணமாகக் கொண்டு பெண்மக்களுக்குக் கல்வியேகூடாதெனக் கூறிவிடலாமா? பெண் மக்களுக்குக் கல்வி அவசியம் வேண்டியதுதான். அன்னருக்குக் கட்டாயப் படிப்புக்கூட விருக்கவேண்டுமெனபதே எனது கொள்கை. ஆனல் தற்காலத்திய கல்வி கூடாதென்பதே. தற்காலப் பெண் கல்வியில் பல சீர்திருத்தங்கள் செய்யப்படுதல் வேண்டும். மேல்நாட்டு முறைகளில் போதிக்கப்படுங் கல்வி நம் நாட்டுப் பெண்களுக்குக் கூடாது. மேல்நாட்டு முறைகளே மேற்கூறிய இடைஞ்சல்களை யுண்டாக்குகின்றன.

தற்காலத்தில் பெண்கள் பள்ளிக்கூடத்தில் அரைகுறையாகப் படித்து அதோடு வீட்டில் நின்று விடுகின்றனர். அவர்களுடைய பள்ளிக்கூடங்களில் தம் கணவனிடம் நடந்து கொள்ளவேண்டிய முறைகள், தெய்வபக்தி, நம்முடைய மதக் கோட்பாடுகள், குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டிய முறைகள் முதலியவை கற்றுக்கொடுக்கப் படுவதில்லை. ஆனல் அதற்கு மாறுக அன்னியமத நூலாகிய பைபிளும், மேல்நாட்டுப் பெணகளின் சில சரித்திரங்களும், போலி நாகரீகமும் கற்றுக்கொடுக்கப்படுகின்றன. இவ்வாறுன அரைகுறைக் கல்வியும், போலிப் படிப்பும் கற்றபிறகு தங்கள் வாழ்நாட்களில் புகுகின்றனர். அச்சமயத்திலேயோ இவர்களுக்கென தற்காலப் புலவர்களால் வரையப்பட்ட நாவல்களைப் படிக்க வாரம்பிக்கின்றனர். அந்நாவல்கள் கடைசி பக்கங்களில் ஏதோ சில புத்திமதிகளை போதிப்பதாகத் தோன்றினும், ஒழுக்கமற்றசெயல்கள் பலர்செய்ததாகப் பல விடங்களில் எழுதப்படுவதால் அவைகளே அவர்களுக்குச் சீக்கிரம் பிடிபடுகின்றன. அதனல் தாங்களும் ஒழுக்கம் தவறி நடக்க ஆரம்பிக்கின்றனர். அதில் வரைந்துள்ள போலி நாகரீகத்தையே நாகரீகமெனக் கொள்ளுகின்றனர். மேல்நாட்டு வழக்கங்களாகிய சித்திரம் எழுதுதல், பூ போடுதல் முதலியவை மாத்திரம் கற்றுக்கொடுக்கப்படுவதால் தங்கள் வீட்டில் நாற்காலியி லுட்கார்ந்துகொண்டு விலையுயர்ந்த வாடைகளையும் நூல்களையும் வாங்கிச் சித்திரம் போட்டுக்கொண்டிருக்க வேண்டுமே தவிர குடித்தனத்திற்கு அவசியமாகிய இலைதைத்தல் குழந்தைகளின் உடைதைத்தல் முதலியன தங்கள் அந்தஸ்துக்குக் குறைந்ததெனநினைக்கின்றனர். நம் நாட்டுக்கேற்றவாறு நம் நாட்டுப்பெண்களுக்கு வேண்டிய சீர்

திருத்தங்களோடு கல்விக்கற்றுக் கொடுத்தல்வேண்டும். அதாவது, பெண் பள்ளிக்கூடங்களில் நம் நாட்டு ஸ்திரீகளே உபாத்தினிகளாக விருத்தல் வேண்டும் தினந்தோறும் குறைந்தது ஒருமணி நேரமாவது நம் மதத்தையும் பூர்வகால இந்து மாது சிரோமணிகளின் சரிதையையும் கற்பித்தல் வேண்டும். பெண்கள் முதலில் பெற்றோரிடமும், பிறகு கணவரிடமும் நடந்துகொள்ளவேண்டிய முறைகளும், குடும்பவாழ்க்கைக்கு அவசியமான குழந்தைகளைப் பாதுகாத்தல், சில வைத்தியமுறைகள், சிறு உடைகளைத் தைத்தல் இவைகளைப்பற்றிய போதித்தல் வேண்டும். அவர்கள் பள்ளிக்கூடத்தினின்றும் நிறுத்தப்பட்டவுடன் கடவுள் பக்தியைத்தரும்படியான தேவாரம், திருவாசகம் முதலிய புத்தகங்களையே படிக்க விடவேண்டும். இவ்வாறு செய்வதினால் மேற்படி பெண்கள் நல்ல அறிவாளிகளாகவிருத்தலோடு இல்வாழ்க்கைக் கோர் பேருதவியாகவும், கற்பிற் சிறந்த கண்மணிகளாகவும் பக்தி நிறைந்த சிரோமணிகளாகவும் விளங்குவர்.

கா. முனுசாமி,
காஞ்சீபுரம்.

குறிப்பு:—நமது நண்பர் கூறுமாறு கல்வியால் பெண்களுக்குக் கெடுதியும் உண்டாகிறது என்பது உண்மையாயினும் இயற்கையில் துர்க்குணமுடைய பெண்களே தங்கள் கல்வியால் அகங்காரமடைந்து தாங்கள் கற்ற கல்வியைத் தங்கள் துர்க்கிருத்தியங்களுக்கு உதவியாக்கிக் கொள்கிறார்கள். ஆயினும் இயற்கையாகவே துர்நடக்கைகளில் விருப்பமுடையபெண்கள் பத்துப்பேர் கல்விகற்றால் அவர்களில் சிலரேனும் அப்பிரியத்தையொழித்து நல்வழியிற் றிரும்புவார்கள் என்பதில் ஐயமில்லை.

ஆனால் நமது பெண்களுக்கு எத்தகைய கல்வி கற்பிக்க வேண்டுமென்பதையே கவனிக்கவேண்டும். நமது தேசாசார மதாசார போதனைகளும், கற்பிலக்கணமும், நம் நாட்டுக் கற்பரசிகளின் சரித்திரம், கணவன் முதலியோரிடம் நடந்துகொள்ளும் முறைமை, மக்களை வளர்க்கும் நெறி, ஈசுரபக்தி முதலிய விஷயங்களையும் பற்றிய நூல்களையே யவர்களுக்குக் கற்பிக்கும் பட்சத்தில் கல்வியால் பெண்களுடைய நடக்கை கெடும் என்று கருதக் காரணமேயிராது. நமது மத உபாத்திமார்களைக் கொண்டே நம் பெண் மக்களுக்குக் கல்வி கற்பிக்கவேண்டியது அத்தியாவசியமாகும்.

அப்படிக்கின்றி அன்னியதேச அன்னிய மதாசாரங்களைப் பற்றிய நூல்களைப் போதிப்பதும், அன்னியமத உபாத்தியாயர்களைக் கொண்டு கல்வி கற்பிப்பதும் நம் பெண்மணிகளுக்கு நாமே பெருந்தீங்கை விளைவிப்பதாகும். அவ்வழியாய் நம் தாய்நாட்டிற்கே கேடிழைத்தவர்களாவோம்.

பத்திரிகாசிரியர்.

---

## மகப்பேறு.

உடன்பிறந்தாரே!

1. மக்களைப் பெறுவதில் பெண்பாலர் அநேக கடமைகளை அறிந்திருக்கவேண்டும். ஒருதாய் விரும்பினால் அழகுள்ள மகவையும், அங்கக்

குறைவான மகவையும், அறிவுள்ள மகவையும், முழுமூடப் பிள்ளையையும், நல்லொழுக்கமுள்ள சான்றோனையும், தீயவொழுக்கமுள்ள வம்பனையும் விருப்பம்போல் பெறலாம். இன்னும் விளங்கக்கூறினால் ஒருதாய், தான் எண்ணிய எண்ணம்போல் நல்லவனையோ தீயவனையோ பெறலாம் என்பதே. தாய்மார்களே தங்கள் பிள்ளைகளின் ஒழுக்கத்திற்கு மூலமாயிருக்கிறார்கள். தாய், தான் சூல்கொண்டிருக்கும்போது எண்ணும் எண்ணங்களும், செய்யும் வேலைகளும் அக்குழந்தையின் ஒழுக்கத்திற்கு ஒரு மூளையாக அமைகிறது. இது நோக்கியே "நூலைப்போல சீலை தாயைப் போல பிள்ளை" என்றும், தாயைத் தண்ணீர்க்கரையில் பார்த்தால் மகளை வீட்டிலா பார்க்கவேண்டும்" என்றும் பழமொழிகள் வழங்குகின்றன. இதை விளக்கப் பழையகதைகள் இரண்டொன்று சொல்லுகிறேன்.

2. இரணியாக்ஷன் என்ற அரக்கன் தவஞ்செய்து அநேகவரம் பெற்றுப் பிறகு தானே கடவுள் என்றும், தன்னையே யாவரும் கும்பிடவேண்டுமென்றும தேவர்கள் முதல் யாவரையும் கட்டாயப் படுத்தினான். அவன் தம்பி செய்த குறும்புக்காக அவனைத் திருமால் கொன்று விட்டார். அத்திருமாலைக் கொல்லும் பொருட்டு இரணியாக்ஷன் தவஞ்செய்யப் போனான். அப்பொழுது அவன் மனைவி சூல் கொண்டிருந்தாள். அவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளையும் தங்களை வருத்துமென்று கருதி தேவேந்திரன் அவளைச் சிறையிலடைத்து வைக்க எண்ணி அவளைப் பிடித்துக்கொண்டு போனான். அப்பொழுது நாரதர் அவளைக் காப்பாற்ற நினைத்து இந்திரனிடம் வந்து அவளை என்ன செய்யப்போகிறாய், என்று கேட்டார். அவன் நாரதரை வணங்கி இவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளை எங்கள் மத்தியில் வளர்ந்தால் நல்லவனாக இருக்குமென்று, இவளை என் வீட்டில் பேறுகாலம் கழியும்வரை வைத்திருக்கப்போகிறேன் என்றான். உடனே நாரதர் அவனைத்தேற்றி அனுப்பிவிடுத் தான் அழைத்துக் கொண்டு சென்றார். அவள் இந்திரன் துன்புறுத்தாதிருக்க தன் நாதன் வரும்வரை சூல் வளராதிருக்க வரங்கேட்டாள். அப்பொழுது நாரதர் திருமால் மந்திரத்தைச் சொல்லிக்கொண்டிரு என்று அதன பெருமையைக் கூறிச் சென்றார். அவள் வேறு நினைவு இல்லாமல் சொல்லிவந்ததால் பின்னால் அவள் வயிற்றிற் பிறந்த பிள்ளை தன் தகப்பனையும் மீறி கடவுள் ஒருவர் உண்டு என்று நம்பி நலவொழுக்கத்தில் நின்று திருமாலை வணங்கிற்று. இரணியன் தன் பிள்ளை என்றும் பாராமல் மலையிலிருந்து உருட்டியும் நஞ்சூட்டியும் நெருப்பில் போட்டும் பல துன்பங்கள் செய்தும் திருமாலையே அது வணங்கிற்று. பின் தூணில் தோன்றும் படியாகவும் செய்தது. அக்குழந்தையின் பெயர் பிரகலாதன். பிரகலாதன் தாய் தான் சூல் கொண்டிருக்கும்போது எண்ணித் தொழுத திருமால் மந்திரம் அக்குழந்தையைக் கடவுள் வழிபாட்டிற்குத் திருப்பியது.

3. இன்னும் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப பிள்ளையின் மகளை திருவெண்காட்டு அச்சுதன் என்பவர் மணந்தார். அதன் பிறகு இவர்கள் பிள்ளை இல்லாமல் நெடுநாள் வருந்தினர். அதற்காக அவர்கள் ஆலயங்கள் தோறும் சென்று சிவனைப் போற்றி வந்தார்கள். அதனால் சிவனது அருளால் ஓர் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குச் சுவேதவனப் பெருமான் என்று பெயரிட்டார்கள். அக்குழந்தை 2-வது வயதிலேயே சிவஞானம்

பெற்றும், சகல ஆகமபண்டிதரையும் வென்று தனக்கு மாணுக்கன் ஆக்கி விளங்கிற்று. அக்குழந்தைப் பருவத்திலேயே உண்மையறிவைப் பலர்க்கும் விளக்கி வந்தமையால் மெய்கண்டதேவ ரென்று பெயர்பெற்றுச் சிவஞான போதம் என்ற நூலைச்செய்து அவர் சிறப்புற்றுர். மெய்கண்ட தேவரின் தாயார் நெடுநாள் மகவில்லாமல் கடவுளன்புகொண்டு விளங்கினமையால் குழந்தையையும் ஞானக்குழந்தையாகப் பெற்றுள். ஒரு மாது தான் சூல் கொண்ட ஐந்தாம் மாதம் பாம்புகடிக்க அதை நினைத்துக்கொண்டிருந்து, பாம்பைப் பெற்றுள். இது மூன்று ஆண்டுகளுக்குமுன் விக்கிரமசிங்கபுரம் என்றவூரில் நடந்தது. ஒருத்தி, தான் சூல்கொண்டிருக்கும் காலத்து நகத்தைக் கடித்துக்கொண்டிருந்தாள். அவள் நகம் சொத்தையாயிருக்கும் குழந்தையைப் பெற்றுள். இப்படிப்பட்ட பல செய்திகள் நாள் தோறும் நடக்கின்றன.

4. ஆகவே சூல் கொண்டிருக்கும் பெண்கள் தாங்கள் செய்யும் வேலைகளும் எண்ணும் எண்ணங்களும் தங்கள் குழந்தைகளைப் பீடிக்கிறது என்று அறிந்து ஒழுகவேண்டும். சூல்கொண்டிருக்கும்போது நல்லொழுக்கமும் நல்லெண்ணமும் கொள்ளாத் தாயார் நல் மகவைப்பெறல் முடியாது. ஒரு செல்வந்தேடும் மகவு விரும்பியதாய் செல்வம் சேர்க்கும் பல வழிகளைக் கூறும் நூல்களையும், அதை நல்வழியில் சேர்த்த பெரியோர் கதையினையும் சூல்கொண்டிருக்கும் காலத்துப் படிக்கக்கடவர். இன்னும் சூலிகள் அச்சம் என்பதைக் கொஞ்சமும் அடையக்கூடாது. அச்சம் குழந்தைகள் அழகைக்கெடுத்துமலினம் அடையச்செய்கிறது. அழகான மகவு வேண்டு மென்ற தாயார் அழகு என்றுதான் நினைக்கும் பெரியோரைப் பற்றி நினைத்தலும், அவர் கதையினைக் கேட்டலும், உடல் அமைப்பைப் பற்றிப் பேசலும் செய்துவரவேண்டும்.

5. சூலிகள் அதிக உரத்துப்பேசக் கூடாது; பயம்கொள்ளக்கூடாது; சோம்பலா யிருக்கக்கூடாது; தூய்மையற்று அசிங்கமா யிருக்கலாகாது. எவ்வுயிர்களிடத்தும் அன்பு கொள்ளவேண்டும்.

6. ஒவ்வொருநாளும் தான் நினைத்த மகவைத் தனக் குதவிடுமாறு இரவில் படுக்கும்போது "இறைவனே! நான் ஒருகுற்றமும் இன்று செய்யவில்லை; என்வயிற்றில் வளரும் குழந்தை கடவுள் ஞானம்பெற்று நல்ல தாய்த் தூய்மனதுடையதாய் யார்க்கும் நலஞ்செய்வதா யிருக்கவேண்டும்" என்று சொல்லித் தூக்கம் கொள்ளவேண்டும். மேற்கண்ட நல்லொழுக்கங்கள் சிறு வயது முதலே நாள்தோறும் பழகி வந்தால் அன்றி, நம்மிடம் நிலைகொள்ளாது. ஆதலால் சிறுபருவ முதல் நல்லொழுக்கமில்லாத் தாய்மார் பல கெட்ட மக்களைப்பெற்றுத் துன்புறுவர். அவர்கள் கெட்ட மக்களைப் பெறுவது தமது செய்கை என்பதை மறந்து அக்குழந்தைகளிடம் கோபம் கொள்வது என்ன மடமையாகும். ஆகையால் அன்னையரே நமதுவிடா நல்லெண்ணெத்திஞல் நாம் நன்மக்களைப் பெற்று நலமும் முத்தியும் அடைவதோடு, தீய எண்ணத்தால் தீயமக்களைப்பெற்றுத் துன்பமும் நரகமும் அடையலாம் என்ற கருத்தை விளக்கவே

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"

என்று அறிவுறுத்தினர் திருவள்ளுவர். அதாவது குற்றமில்லா நல்லமக்

களைப் பெற்றவர்களை எழுபிறப்புக்களிலும் பாவம் அல்லது தீவினை தொடாதென்று தெளிவாய்க் கூறியிருக்கிறார்.

நல்லவழியில் ஒழுகி நல்லமக்களைப் பெற நமக்கு இறைவன் துணை செய்ய அவனடி பணிந்து போற்றுவாம்.

ஓர் பெண்பால்,
சைவப்பிரகாச வித்யாசாலை,
உடன்குடி, கிரிஸ்டியன் நகர் போஸ்டு.

---

## கைவல்ய நவநீத வசனம்.

(346-ம் பக்கத் தொடர்ச்சி.)

சீடன்:—துக்க நிவர்த்தி ஆனந்தப் பிராப்தி ரூபமான மோக்ஷத்தை யளித்தருளிய பரமாசாரிய சுவாமிகளே! அஷ்டமா சித்திகள் ஈசுவரனுடையதென் றருளினீர்களே. பல முனிவர்களும் சித்தர் முதலியோரும் அணிமாதி சித்திகள் கைவந்தவர்களாக இப்பூமியில் காணப்பட்டிருப்பதால் அதை யீசுவரனுடைய தென்று எப்படிக் கருதுவதோ, அடியேன் புத்திக்கு விளங்கும்படி யருளவேண்டு கிறேன்.

குரு:—சீடனே! அம்முனிவர்கள் ஈசுவரனை நோக்கித் தவம் செய்ததாலும், யோகசாதனையாலும் அணிமாதி சித்திகள் ஈசுவரனு லளிக்கப்பெற்றார்கள்.

சீடன்:—சுவாமிகளே! அந்த ஞானிகள் தவத்தினுல் அட்டமாசித்திகள், முத்தி இரண்டையு மடைந்தார்க ளென்றீர்களே, அப்படித் தவத்தால் இரண்டையும் அடையலாமெனின், இக்காலத்திலுள்ள ஞானிகளிடம் அட்டமாசித்திகள் காணப்படவில்லையே. இவர்கள் ஞானிகளென்னில் இவர்களுக்கு என் அச்சித்திகள் கிடைக்கவில்லை? இதை விளக்கி யருளப் பிரார்த்திக்கிறேன்.

குரு:—புத்திரனே! தவம் இருவகைப்படும்: ஒன்று காமியத்தவம், மற்றொன்று நிட்காமியத்தவம். காமியத்தவ மென்பது ஒரு பலனைப் பெற விரும்பிச் செய்யும் தவமாகும். நிட்காமியத்தவம் என்பது ஒரு பலனையும் இச்சியாமல் செய்யும் தவமாகும். இவற்றில் காமியத் தவம் அட்டமாசித்திகளைத் தரும், நிட்காமியத்தவம் மோக்ஷமொன்றைமட்டுமே தரும். இவற்றில் ஒன்றை யியற்றுவோர் ஒன்றையே பெறுவர். அக்காலத்திலிருந்த பெரியோர் இருவிதத் தவங்களையு மியற்றினபடியால் சித்தி, முத்தி யிரண்டையு மடைந்தார்கள். ஜனகன், மாபலி, பாகீரதன் முதலியோர் மோக்ஷ சாதனமான தத்துவ ஞானத்தை மட்டுமே யடைந்தனரன்றி, சித்திகளை யடைய முயலவில்லை. சிலர் இனிமையான சித்திகளை மட்டுமே விரும்பினர். சிலர் முத்தியை மட்டுமே விரும்பினர். முனிவர்கள் அடைந்த சித்திகள் விளையாட்டை மட்டுமே தருமன்றி முத்தியை யளிக்கமாட்டா.

ஆன்ம பரமான்ம ஐக்யத்தை யளிக்கும் ஞானமே முத்தியைத் தருமெனில், சிலர் சித்திகளை யடைய விருப்பம் வைத்து அதற்காகக் கஷ்ட

மான முயற்சிகளை யெடுத்துக்கொள்ள வேண்டியதேன் எனில், பிராரப்த பலனை யாவருமே யனுபவித்துத் தீரவேண்டும். ஆகையால் அவர்கள் பிராரப்த வலியால் தூண்டப்பட்டு அட்டமாசித்திகளை யடைந்தார்களன்றி வேறில்லை.

[தேவிகாலோத்தரத்தில் "அட்டமா சித்திகளும் அனைத்துள்ள பேறுகளும்—கட்டமாங் கதிகள்தரும் பரகதி காணக்கொடா" என்று பரம சிவம் அருளியிருக்கிறார்.]

சீடன்:—அனேகம் சுருதிப் பிரமாணங்களாலும், யுக்தி அனுபவங்களாலும் என் மனம் ஞான நிலையினின்றும் சலியா வண்ணம் அருள் புரியும் ஞான தேசிகரே! அடியேன் அந்தக் கரணத்திலிருந்த மயக்கங்களனைத்து மொழிந்து தெளிவெய்தினேன். பிரகாசமாகிய கண்ணாடியை யடிக்கடி துடைப்பதில் குற்றமில்லை யன்றோ? அதுபோல் அடியேனுக்குத் தாங்கள் திருவாய் மலர்ந்த உபதேச மொழிகளாகிய அமிர்தம் தெவிட்டவில்லை. இன்னும் அத்தகைய மொழிகளைக் கேட்க விரும்புகின்றேன்.

[மயக்கங்களென்பன அஞ்ஞான தசையில் உள்ள ஐவகைப் பிராந்திகளாம். அவை:—

1. இது நித்தியம் இது அநித்திய மென்பதை யாராய்ந்துணராது, இவ்வுலகம் நித்தியப் பொருளே யென்று மயங்குதல்.

2. கருவி கரணங்களை வேறு பிரித்துத் தனக்கன்னியமாகக் காணாமல், சடமாகிய தேகமே தானென்றிருத்தல்.

3. "நான் சீவன்; நான் கர்மங்களைச் செய்கிறேன்; நான் போகங்களை யனுபவிக்கிறேன்" என்று கருதல்.

4. ஆன்மாவுக் கன்னியமாகக் கடவுள் வேறே இருக்கிறாரென்று கருதல்.

5. தான் சச்சிதானந்த சொரூபமே யென்பதை யுணராமல், கிஞ்சிக்ஞனாகிய நான் எப்படிச் சிவமாவேன் என்று மயங்குதல்.

இந்த ஐந்து பிராந்திகளும் தன்னை யறிந்தவுடன் நீங்கும்.]

(சீடன் கர்மானுபவத்தைப் பற்றிய ஓர் ஐயத்தைப்பற்றி வினவுகிறான்).

சீடன்:—சுவாமிகளே! சாத்திரங்கள் உண்மை யல்லாதனவற்றைக் கூறுவனவல்லவோ? ஒருவர் செய்த கர்மங்கள் அனுபவித்தாலன்றி ஒழியாதென்று கூறப்பட்டிருக்கிறது. மறுபடி பல ஜன்மங்களில் செய்த சஞ்சித கர்மங்களை யெல்லாம் பரிசுத்தமான ஞானத்தீ சுட்டெரிக்கு மென்று கூறப்பட் டிருக்கிறது. சுவாமிகளே! இவை யிரண்டில் எதை யுண்மை யென்று நம்புவதோ அடியேற்கு விளக்கி யருளல் வேண்டும்.

குரு:—மைந்தனே! அந்தக்கரண பேதங்கள் அளவில்லாதன வாதலால் சீவபேதங்களுக் களவில்லை. (அந்தக்காரணங்களிலுள்ள சுபம், அசுபம், சுபாசுபம் என்ற பேதங்களின்படி) சீவன்களின் செய்கைகளும் அளவில்லாதனவே. இவற்றால் சீவர்களில் அதிகாரி பேதங்கள் உண்டு. இதனால், ஒரு விருக்ஷத்தில் எப்படி முதலில் மொக்கு தோன்றி, பின் பூவாகி, காயாகிக் கடையில் பலனளிக்கிறதோ, அதுபோல் வேதமும்

அதிகாரி பேதத்திற்குத் தக்கபடி கர்மகாண்டம், உபாசனைகாண்டம், ஞானகாண்டம் என்ற மூன்றுவித காண்டங்களாலே, பூர்வபட்சம் சித்தாந்தம் இரண்டையும் கூறுநிற்கும். பாபகர்மங்களைச் செய்வோர் அடையும் நரகங்கள் நிச்சயமாக வுளவேனும், தானம், மந்திரம், விரதம், எக்ஞம் முதலிய பிராயச்சித்தங்களால் பாபம் ஒழிந்துபோம் என்று சாத்திரங்கள் கூறுவது பொய்யாகுமோ? அதுபோலவே, அநேக ஜன்மங்களை யுண்டாக்கக்கூடிய சஞ்சித கர்மங்கள் எவ்வளவு அதிகமாயினும் (பிரம்மான்ம ஐக்ய) ஞானமாகிய அக்னி சுட்டெரிக்கும் என்ற வேதவாக்கியத்தை நம்பினால் மோக்ஷமடைவது சத்தியம்.

[செய்த கர்மத்தை அனுபவித்தே தீரவேண்டு மென்பதும், பிராயச்சித்தத்தால் பாபங்களை நீக்கிக் கொள்ளலாமென்பதும் கர்ம காண்டத்திற் கூறப்பட்டவை. இவை மந்த அதிகாரிகளுக்கு. சஞ்சித கர்மங்கள் எவ்வளவிருப்பினும் ஞானக்னி சுட்டெரிக்கு மென்பது ஞான காண்டத்தில் விதித்துள்ளது. இது தீவிர அதிகாரிகளுக்கு. உபதேசமே அதிகாரி பேதமறிந்து கூறப்பட வேண்டியது. வேதத்தில் சகல அதிகாரிகளுக்கும் அவரவர்கள் அறிவின் அளவிற்குத் தக்கபடி கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் சில விஷயங்களில் கர்ம காண்டத்தில் கூறப்பட்டிருப்பவை ஞான காண்டத்தில் கூறப்பட்டிருப்பவைகட்கு முரணாகத் தோன்றும். இது அதிகாரி பேதத்திற்குத் தக்கபடி உணரவேண்டிய விஷயம்.

குரு ஆசானுடைய அதிகாரத்தையும், அறிவின் அளவையும் சோதித்தே அவரவருக்குத் தக்க உபதேசம் செய்வர்.

"சீடனறி வெவ்வளவோ வவ்வளவுஞ் சிந்தித்துக்
கூறுமுப தேசங்கள் கூறுவா—னீடுபுக
ழுக்கமுடைச் சீராம னெண்ணுதற்கா யன்றெய்தான்
காக்கைக்குத் தக்க கணை" (வள்ளலார்-ஞானவிளக்கம்.)

மந்த அதிகாரிகளுக்கே சரியை கிரியைகளைக் கூறியிருப்பது. அதனால் ஞானத்தை யுபதேசிக்கும் ஞான காண்டத்தில் அவற்றைத் தாழ்த்தியே கூறப்பட்டிருக்கிறது.

"தலையெல்லாந் தெய்வமெனுந் தன்னை மற்றேனை
யிடையெல்லாம் வேறிருக்கு மென்னுங்—கடையெல்லா
மரத்தைப்பா டாணத்தை மண்ணையிருஞ் செம்பைக்
கருத்துருகத் தெய்வமெனுங் காண்"

"உத்தமங்க ளெல்லா முணர்வையே தாம்பேணு
மத்திமங்க ளேபதுமை யைவாழ்த்துஞ்—சுத்த
வதமங்க ளெல்லாந்தன் னுகத்தைப் போற்று
நதியோடை கூபமென நாடு"

"தத்துவத்துக் கப்பாலே தன்னைத் தரிசித்து
நித்தபரி பூரணத்தி னில்லாமல்—சுத்த
பனிமாயை யாற்செய் பதுமையினைத் தேடு
நனிமா னிடமிருக நாடு" (வள்ளலார்-ஞானவிளக்கம்.)

இவ்வாறு கூறியதனாலேயே சரியையாதி விக்கிரகாராதனை முதலியவற்றை யடியோடு பயனற்றவை யென்று கருதிவிடுவது சுத்த மடமையாகும். உச்

சிப்படி யேறியவனுக்கே கீழ்ப்படி யனுவசியமன்றி ஏனையோர்க்கு அவ சியமேயாகும்.]

சீடன்:—ஞானதேசிகரே! பல ஜன்மங்களுக்குக் காரணமாகிய சஞ்சித கர்மங்களின் வேரை யறுப்பதும், பிரம்ம சாக்ஷாத்காரமான மோக்ஷத்தை யளிப்பதுமாகிய மெய்ஞ்ஞானத்தின் மகத்துவத்தை மிகக் கற்றோரும் அறிந்து அதனைப் பெற்றுய்யாமல், கர்மமாகிய படுகுழியில் விழுந்தவாறேனோ அருள் புரியப் பிரார்த்திக்கிறேன்.

குரு:—மைந்தனே! யாவற்றிலும் மெய்ப் பொருளையே காணும் அகமுக திருஷ்டி யுடையோர் நித்தியமான பிரம்மானந்த பதவியை யடைவர். வழி நடப்போர், இரண்டு பிரகாசமுள்ள கண்களிருப்பினும், பராமுகமாயிருந்தால் எப்படிக் குழியில் வீழ்வார்களோ அதுபோல் வெளிமுகங்கொண்ட சொர்க்ககாமிகளாயினோர், கருவி நூல் பயிற்சியாகிய கல்வி கற்றோராயினும், பிறவிக் கடலி லழுந்துவார்களேயன்றி முத்தி யடையார்கள்.

சீடன்:—தேசிகோத்தமரே! நல்வினை, தீவினையும் யாவற்றிற்கும் காரண கர்த்தாவாகிய ஈசுரன் செய்விக்கும் செயல்களன்றோ? அப்படி யிருக்கச் சுதந்தர ஈனராகிய சீவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் மேல் குற்றங்கூற ஒரு காரணமு மில்லையே.

குரு:—மைந்தனே! அவை சாத்திரங்களின் பொருளை மறந்த அறிவிலிகள் கூறும் மயக்க மொழிகளே யாகும். உண்மையில் ஈசுவரனுடைய சிருஷ்டியும், சீவனுடைய சிருஷ்டியும் வேறு வேறாகும். உலகில் யாவர்க்கும் பொதுவான சராசரப் பொருள்களாகிய யாவும் ஈசுவர சிருஷ்டியாகும். நானென்னும் அகந்தை, மமதாபிமானங்கள், கோபம், பொறாமை, ஆசை முதலிய இவை யாவும் சீவசிருஷ்டி யாகும்.

ஈசுவரனுடைய சிருஷ்டிகள் யாவும் மோக்ஷமடையச் சாதனங்களாகும். சீவர்களாற் கற்பிக்கப்பட்ட சிருட்டிகள் அவர்களுக்குப் பிறவியை யளிக்கும் பந்தங்களாகும். ஈசுர சிருஷ்டியாகிய தாவராதிகள் அழிந்தால் ஒருவர்க்கும் ஜனனம் ஒழியாது. கோபம், அகங்காரம், ஆசை முதலிய சீவசிருட்டிகள் நாசமாயின் ஜனனம் ஒழியும்.

பிரளய காலத்தில் ஈசுர சிருஷ்டியாகிய சகலமும் அழிகின்றன. அப்படியாயினும் ஜனன நாசம் ஒருவரு மடைவதில்லை. தேசம், காலம், தேகம் முதலிய ஈசுவர சிருஷ்டிகள் யாவும் இருந்தபோதிலும், சீவ சிருஷ்டியாகிய ஆசை, கோபம், அகங்காராதிகளை யொழித்தவர்கள் உயிரோடு இவ்வுலகிலேயே ஞானமுடைய ஜீவன் முக்தர்களாகிறார்கள். ஆகையால் பாசமோக அகங்காராதிகளனைத்தும் சீவசிருஷ்டியே யன்றி ஈசுவரனுடைய சிருஷ்டியல்லவென் றறியவேண்டும். (தொடரும்.)

சீடன்.

---

## அநுபவத்தில் கண்டறிந்த சில ஔஷத முறைகள்.

ஒரு வியாதியஸ்தனுக்குத் தன் வியாதிக்குத் தக்கவாறு பலவித மருந்துகள் பிரயோகம் செய்வதுண்டு எனினும், கீழே குறிப்பிட்டவைகள் நமது அநுபவத்தில் கைகண்டவையாகும்.

(1) ஒருதலை நோய்க்கு :—எள் எண்ணெயுடன் சிறு கொட்டை முத்து எண்ணெய் பசுவின் நெய் சமபாகம் சேர்த்து அடுப்பிலிட்டு இளஞ் சூடாகக்காய்ச்சித் தினப்பிரதி சூரியோதயத்திற்கு முன் தலை குளித்துவர தீராத ஒருதலை நோய்தீரும். இப்படி விடாமல் மூன்றுதினம் செய்யவும்.

(2) பல் அசைவு வலிக்கு:—முற்றின கருவேலன் அடி மரத்துப்பட்டையைக் கொண்டுவந்து சிறிதுசிறிதாக நறுக்கி ஒருபடி ஜலத்தில்போட்டு கால்படியாக சுண்ட வைத்து எடுத்துக்கொண்டு அதோடு காட்டுக்கொட்டைப்பால், ஆலமரத்தின் பால் வீசம்படி சேர்த்து வெது வெதுப்பாக தினம் மூன்று தடவையாகக் கொப்பளித்து வரவும். வீங்கிய பல்லுக்கு வலிமையுண்டாகும்.

(3) வண்டு கடிக்கு:—முதிர்ந்த நிலையாவரன் வேர் கொண்டு வந்து நன்றாய்க் கழுவி உலர்ந்த பின் எலும்பிச்சம் பழத்தை அழுக்குப் படிந்த கல்லின்மேல் பிழிந்து மேற்படி வேரை இழைக்கச் சந்தனம் போலாகும். அதை யெடுத்து வண்டுகடி யிருக்குமிடத்தில் இரண்டு மூன்று வேளை பூசி வர வண்டுகடி வந்த விடம் தெரியாமற்போம்.

(4) சகல காயங்களுக்கும்—இரண்டு பாகம் சுண்ணாம்பு நீரில் ஒரு பாகம் தேங்கா யெண்ணெயைக் கலந்து சிறு மத்திட்டுச் சிலுப்பினால் மேலே நுரை கிளம்பி வரும். அதை யெடுத்துக் காயங்களில் தடவி வர நாள்பட்ட காயங்களும் காய்ந்து விடும்.

(5) சிலந்திக்கட்டிக்கு:—துத்தித்தழையை விளக்கெண்ணெயில் வதக்கிக்கட்ட உள்ளே அழுந்திவிடும்; அல்லது சீக்கிரம் பழுத்துடைந்து உபாதியை நீக்கும்.

(6) சொறி சிரங்கு:—உப்புமண் கொண்டு வந்து ஒரு நாள் ஜலத்திலூறவைத்து மறு நாளெடுத்து வடி கட்டி யெடுத்து அதற்குச் சமனெடை தேங்கா யெண்ணெய் சேர்த்து நீர் சுண்ட நன்றாய்க் காய்ச்சிய பின் கருகிய மிளகாய்ப் பொடி கொஞ்சம் எண்ணெயில்கலந்து பூசிவரவும். வேண்டுமானால் சில நிமிஷம் பொறுத்து சோப் அல்லது சீக்காய்ப் பொடிபோட்டு அலம்பிவிடலாம்.

(7) கண்ணில் விழுந்த பூ கரைய:—அம்மான் பச்சரிசி யென்ற மூலிகையின் கொழுந்தைக் கிள்ள வெள்ளைநிறமான பால் வரும். அந்தப் பாலைக் கண்ணில் விழுந்த பூவின்மேல் வைக்க அது உடைந்து நீர் வந்து விடும். இதைப்போல் வேறு மருந்து கிடையாது.

(8) நீர்க்கடுப்பு:-ஆனை நெருஞ்சி பிடுங்கி வந்து கால் அல்லது காலேயரைக்கால் படி எருமைத்தயிரில் சில நெருஞ்சியிலைகளைப் போட்டுப் பத்துநிமிஷம் பொறுத்து மேற்படி இலைகளை எடுத்துத் தயிரை நன்றாய்க் கலக்கிச் சாப்பிடவும். ஒரே வேளையில்குணம் தெரியலாம்; அதிகாலையில் சாப்பிடவும். பத்தியம்; காரம் நீக்கவும்.

K. R. கணபதி பிள்ளை,
சுண்டக்காமுத்தூர்.

## "வரும்விதி வழியில் தங்காது,"

இவ்வுண்மை மொழியானது ஜன சமுகங்களால் தினசரிப் பழக்கத்தில் வழங்கப்பட்டு வருகிறதென்ப தனைவரு மறிந்த விஷயமே யாயினும், "கொட்டினால் தேள் கொட்டா விடில் பிள்ளைப்பூச்சி" என்றபடி இவ்வுரைக்குத் தகுந்தவண்ணம் சம்பவித்தால் அப்போது மட்டும், "வரும் விதி வழியிலும் தங்காது" என்பது வாஸ்தவமே! என்பார். இன்னணம் செப்புவது மானிடப் பிறவிக்கு சகஜம் போலும். யோசிக்குங்கால் கடவுளொருவர் உளர் என்று நிரூபிக்குங்கட்டுரையாம் இது. "இன்னபடியென்று என் தலையில் எழுதிய" என்றபடி கடவுளால் இன்னின்ன காலத்தில் இன்னின்ன சம்பவங்கள் நடக்கும் என்று விதிக்கப்பட்டபடி அந்நன்மையையோ தீமையையோ நாம் அநுபவித்தலே இதன் பொருள். எதிர்கால சம்பவங்களை அறிதல் எல்லாருக்கும் எட்டாக் காரியம். "கேடு வரும் பின்னே, மதிகெட்டு வரும் முன்னே," "யானை வரும் பின்னே, மணியோசை வருமுன்னே" என்றபடி நாம் அடையப்போகும் நல்வினையோ தீவினையோ நமக்குக் கட்புலனாகாவிடினும் நாம் அடையும் கதிக்குத் தகுந்தபடி முன்னாலேயே மனத்தில் ஓர் மாற்றம் உண்டாவது நம் பிற்கால நிகழ்ச்சிக்கு அறிகுறியேயாம். இனி "விதியை மதியால் வெல்லலாம்" என்றது, தான் அடையும் தீவினையை வருமுன்னே மனப்போக்கால் உணர்ந்து சீர்திருத்தல், வந்துவிடினும் (தற்செயலாய்) புத்தி சாதுர்யத்தால் அதினின்றும் மீட்டுக்கொள்ள அல்லது அதன் கடுமையைக் குறைக்க முயல்வதேயாம். சத்தியவானுடைய உயிரை யமன் கொண்ட பிறகு தான் கற்பால் சாவித்திரி அவனை மீண்டும் பெற்றாள். நளன் சூதினால் துர்க்கதி யடைவான் என்பதை உணர்ந்தே யாவரும் அவனைச் சூதாட்டத்தினின்றும் எழ எவ்வளவு கேட்டும் எழாதது "விதிக்குப் புத்தி அநுசாரணை" போலும். எனினும் விதியைத் தடுக்க யாவராலும் முடியாதென்பது தெற்றெனவிளங்கும்.

இதுநிற்க, நம் தலையங்கத்தை விளக்க ஈண்டு ஒரு கதை கூறுவாம்:—

குருகுலதிலகனான பரீட்சித்து மகாராஜன் ஒரு நாட்டில் வேட்டையாடச் சென்ற காலத்து, ஓர் வேங்கைப் புலியைத் தொடர்ந்து அது மறைந்து விடவும் காணாது திரும்பி வருங்காலை தவத்திலாழ்ந்திருக்கும் பயிலவ முனியை புலிசென்ற வழியைக்கேட்க அவர் பேசாமையால், கோபங்கொண்ட அரசன் செத்துக் கிடந்த பாம்பை ரிஷி கழுத்தில் போட்டு வீடு சேர்ந்தார். இதைக் கண்ணுற்ற ஒருவர் அக்ஷணம் சிருங்க முனியிடம் சென்று, அவர் பிதாவுக் குற்றதைச் செப்ப அவர் கோபத்தோடு அப்படிச் செய்தவன் ஏழாம்நாள் தக்ஷகனென்னும் பாம்புக்கிரையாவனென்று சபித்துவிட்டுத் தந்தையையணுகிப் பாம்பை எடுத்தெறிந்துவிட்டு எதிரில் நின்றார். யோகநித்திரை தெளிந்ததும் முனிவர், மகன் வந்தகாரணம் கேட்டார், நடந்ததை உரைசெய்தான். அதைக் கேட்ட பயிலவர் அவ்வரசன் நீதியாலன்றோ நாம் இடையூறின்றித் தவத்திலிருக்கிறோம், சாபத்தை நீக்கு என்றார்.

அதற்கு மகன், நான் இன்னும் தவத்தில் அவ்வளவு முற்றுப் பெறவில்லை, என்றால் முடியாதென்றான். இதினின்றும் தப்ப அரசன் முனிவரா

ணைப்படி நடுச்சமுத்திரத்தில் மண்டபம் கட்டி வசித்துவந்தார். இப்படியிருக்கஏழாம்நாள் தக்ஷகன் சாபத்தைநிறைவேற்றக் கடற்கரைக்குவரும்போது எதிரில் ஓடி வரும் ஓர் பிராமணனைப்பார்த்துத் தானும், பிராமணவேடம் பூண்டு அப்பிராமணன் எங்கே செல்கிறுனென வினவினுன், அதற்கவன் இன்று அரசனை சர்ப்பம் தீண்டப் போகிறது. அதற்குச் சிகிச்சை செய்து என் தரித்திரத்தைத் தீர்ப்பேன் என்றுன். தக்ஷகன், அது உன்னுல் முடியுமாவென, அதற்குப் பிராமணன், ஆதிசேஷன் முதலாய பாம்புகள் கடித்திடினும் நான் அரசனை மீட்பேன் என்றுன். தக்ஷகன் இதைப் பரீக்ஷிக்க வெண்ணி ஓர் ஆலமரத்தை தன் சக்தியால் நிர்மூலப்படுத்த பிராமணனுகிய காசிபர் அதைத் தளிர்க்கச்செய்தார். இதைக்கண்ட தக்ஷகன் காசிபருக்கு வேண்டிய பொருளீந்து எங்கேயாவது போய்விடச் சொன்னுன். யாதும் தடையின்றிப் பிராமணவேடம் பூண்டு அரசனைக் கண்டு ஓர் எலுமிச்சம் பழத்தைக்கொடுக்க, அரசன் அதை முகர்ந்து பார்க்கையில் தக்ஷகன் பாம்புவேடம் பூண்டு அரசனைக்கடிக்க அரசன் இறந்தான்.

K. R. சுப்ரமண்யன்,

உடுமலே.

---

# தேசபக்தி.

பக்தி என்றுல் அன்பு என்று பொருள். ஆனுல் வணக்கத்தோடு கூடிய அன்பிற்குத்தான் பக்தி என்று கூறப்படுகிறது. அதிலும் கடவுள், குரு, பெரியோர் அரசர் இத்தகையோரிடம் காட்டப்படும் மேற்கண்ட அன்பிற்கே பக்தியென்று கூறப்படுகிறது. தாய்நாட்டின்மேல் வைக்கப் படும் அன்பிற்குத் தேசபக்தி என்று பெயர்.

ஒருவர்க்குத் தம்மையீன்ற அன்னையிடம் எப்படி இயற்கையாகவே அன்புண்டாகி விடுகிறதோ, அவ்வாறே பிறந்த நாட்டின்மேலும் ஒருவித அன்பு இயற்கையாகவே ஜனிக்கிறது. தன் தாய்நாடு க்ஷேமமடையவேண்டும், கௌரவமடைய வேண்டும், மேலோங்கி வரவேண்டும் என்ற எண்ணங்கொண்டு அதற்காகத் தன்னுலியன்ற தொண்டு செய்ய விரும்புவதே உண்மையான தேசபக்தியாகும்.

பொது நல ஊழியமாகிய தேசத்தொண்டு புரிவோர் சுயநலத்தைக் கருதமாட்டார்கள். அது மட்டுமல்ல, அவசியம் நேரிடின் சுயநலத்தைத் தியாகம் செய்வார்கள். அப்படிக்கின்றி சுயநல நோக்கங்கொண்டு தேசத்திற்கு உழைக்க விரும்புகிறேன் என்று முன்வருவோரால் தேசத்திற்கு ஒரு நன்மையும் சித்தியாதென்பது அனுபவம். தேசபக்தி இல்லாத ஜனங்கள் ஒருபோதும் முன்னேற்ற மடையார்கள். திருட்டாந்தமாக, உலகில் முன்னேற்ற மடைந்திருக்கும் நாட்டாரனைவரும் மிக்க தேசபக்தியுடையவர்களாக விருக்கக்காணலாம்.

நம் நாட்டிலோ தேசபக்தி குறைவென்றே கூறலாகும். சுய நலத்தைக்கருதுவதை விட்டுப் பொதுநலமாகிய தொண்டுபுரியவேண்டுமென்ற உணர்ச்சி நம் நாட்டில் மிகக்குறைவாக விருப்பது விசனிக்கத்தக்க காரியம். நகரசங்கத்தில் அவயவிகளாகச் செல்ல விரும்புவோர் அதற்காக

ஓட்டுகள் சம்பாதிக்கப் பெரும் பிரயத்தனமும் பணச்செலவும் செய்கிறார்கள். அப்போது தாங்கள் ஜனங்களுக்கு அநேக நன்மைகளைச்செய்ய ஆவல்கொண் டிருப்பதாகப் பலருமறிய வாக்குறுதி கூறுகிறார்கள். ஆனால் இவர்களில் பலர் தங்கள் முயற்சியில் ஜெயம்பெற்று நகரசங்க மண்டபத்தில் சென்று ஆசனத்தில் அமர்ந்ததே, நாம் ஜனங்களின் பல குறைகளை இச்சங்கத்திற் கெடுத்துக் காட்டி அவர்களுக்கு நன்மை புரிவதாகிய பொறுப்பான வேலையை மேற்கொண் டிருக்கிறோம் என்ற எண்ணத்தை யடியோடு மறந்துவிட்டு, தாங்கள் ஒரு கௌரவம் பொருந்திய மேலான பதவியை யடைந்ததாக மட்டும் கருதி விடுகிறார்கள். இத்தகையோர், அப்பதவியாலடையும் சில அநுகூலங்களுக்கும் கௌரவத்திற்கும் ஆசைவைத்தே அவயவிகளாகச் செல்கிறார்கள் என்று கருதப்படுகிறார்கள்.

இப்போது மந்திராலோசனை சபைக்கு அவயவிகளாகத் தெரிந்தெடுக்கப்பட்டுள்ள நம்மவர்கள் தங்களுக்கு பத்தா அதிக மளிக்க வேண்டுமென்றும், ஹானரேபில் என்ற பட்டமளிக்க வேண்டும் கேட்கிறார்க ளென்பதாக "ஹிந்து" பத்திரிகையில் கூறப்பட்டிருக்கிறது. அந்தோ! இவர்கள் அவயவிகளாகச் சென்றது அதிக பத்தாவும், ஹானரேபில் பட்டமும் பெற வேண்டித்தானோ? அப்பதவிக்குச் செல்வோர் செல்வமும் செல்வாக்குமுடையோரேயன்றி, தமது சொந்த சௌகரியங்களுக்குக் கூடப் போதுமான வருமானம் கிடைக்காத ஏழைகளல்லவென்பது இச்சந்தர்ப்பத்தில் கவனிக்கத்தக்கது. நம்மை நம்பி இப்பொறுப்பான வேலைக்குத் தெரிந்தெடுத்தனுப்பிய நமது நாட்டாருக்குத் திருப்தி யுண்டாகும் வண்ணம் நாம் நடந்து கொள்ளுமாறும், நம்மால் நம்மவர்க்கு நிலையான நன்மை யுண்டாகுமாறும் கடவுள் அருள் புரிவாரோ வென்று ஏக்கங்கொண் டிருப்பதற்கு மாறாக நம்மவர் இத்தகைய எண்ணங்களைக் கொள்வது மிகவும் விசனிக்கத்தக்க விஷயமே.

அந்தோ! சுயநலத் தியாகம் செய்யப் பிரிய மில்லாதவர்கள் எங்கேனும் பொது நலங்களைச் செய்ய முடியுமோ? தியாகமே செய்யாவிடினும் சுயநலக் கருத்தாவது இல்லாதிருந்தாலன்றோ பொது நலமாகிய தேசத்தொண்டு புரிய இயலும். நம்மவர் இனியேனும் அத்தகைய நோக்கங்களை விட்டு நம் நாட்டிற்கு அத்தியாவசியமான நன்மைகளைச் செய்யத் தங்களுக்கு அளிக்கப்பட்ட சந்தர்ப்பத்தை வீணுக்காமல், செய்யவேண்டியதை ஊக்கத்தோடும் மனச் சாட்சிக்குத் திருப்தியாகவும் செய்து நமது நாட்டாரின் நன்றியறிதலுக்குப் பாத்திரமாவார்களென்று பிரார்த்திக்கிறோம்.

தேசபக்தரடியான்.

---

## ஓர்கடிதத்திற்கு விடை

(சந்தாநேயர்களனைவரும் இதைக்கவனிக்க கோருகிறோம்.)

திருநெல்வேலி ஜில்லா நல்லூர் ஆலங்குளத்தி லிருக்கும் பாதிரியாராகிய ரெவரெண்ட் S. M. தேவதாஸ் அவர்கள் நமக்கு ஒரு கடிதம் அனுப்பியுள்ளார்கள்.

அதில், தாம் "ஆனந்தபோதினியை" மிகவும் அபிமானித்து, தமது பிள்ளைகளுக்கும் நண்பர்க்கும் அதைப்பற்றிக் கூறி அவர்களைச் சந்தாதாராக்கி, தாமும் வாசித்து வந்ததாகவும், கடந்த இரண்டு வருடங்களாக அதில் கிருஸ்து மார்க்க தூஷணையான காரியங்கள் இருப்பதால் வாசிக்க மனவருத்த முண்டான தாகவும், அப்படிப்பட்ட இதரமார்க்க கண்டனங்களை அச்சடிக்காதிருக்கவேண்டு மென்றும் வரைந்துள்ளார்கள்.

ஆனந்தன் விஷயத்தில் ரெவரண்ட் அவர்கள் வைத்துள்ள அன்பிற்காக மனப்பூர்வமான வந்தனங்க ளளிக்கிறோம். பிற்பாகத்தில் குறிக்கப்பட்ட விஷயத்தைப்பற்றி முன்பே நாம் சஞ்சிகையில் தெளிவாக வரைந்துள்ளோம். ஆனந்தன்மேல் இல்லாத குற்றம் கூறப்படுவதி னிமித்தம் கடைசியாக இன்னொருமுறையும் இதைப்பற்றிக் கூற விரும்புகிறோம்.

நாம் கிருஸ்துமதம் பொய்யென்றுவது, அதில் கூறப்பட்ட தெய்வம் கடவுளல்ல வென்றுவது, குற்றமுடைய தென்றுவது இதுகாறும் கூறவேயில்லை. ஒவ்வொரு மதஸ்தரும் தம்மதத்தைப் பரவச்செய்ய முயலவேண்டுவது நியாயமே. அதைப்பற்றியும் நாம் குறைகூறவில்லை.

கிருஸ்துமத போதகர்களில் சிலர் ஹிந்துக்களாகிய நம்மவர் முன்னின்று தங்கள் மதத்தைப்பற்றிக் கூறுவதோடு ஹிந்து மதத்தை இழிவுபடுத்தி அதில் குற்றங்களைக் கற்பிக்கிறார்கள். அதோடு, தம்மதத்தைப் பிறர் விரும்பி அவர்கள் தாமே அதில்வந்து சேரும்படிச் செய்தால் அதைக் குற்றங்கூற ஒரு நியாயமுமில்லை. அதை விட்டுச் சூது, தந்திரம் முதலியவற்றுல் குடும்பத்திலுள்ள மனைவி, புத்திரன், புத்திரி இவர்களில் ஒருவரை இரகசியமாக அழைத்துப்போய் மறைத்து வைத்திருந்து, அவர்கள் சுற்றத்தார் அவர்களைப் பார்க்காதபடி செய்து, அவர்களைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொள் கிறார்கள்.

இந்த நியாயமற்ற நடக்கையை மட்டுமே நாம் கண்டிக்கிறோம். ஹிந்துமதத்தின் உண்மையையும், மகிமையையும் நம்மவர்க்கு நினைப்பூட்டி அன்னியமத போதனையால் மயங்கிச் சுயமதத்தைக் கைவிடவேண்டாமென்று அவர்களுக்குக் கூறுகிறோம். இவ்வளவே நாம்செய்வது. அன்னிய மதம் எதையும் நாம் கண்டனம் செய்யவில்லை. நாம் கிருஸ்துமதத்தைத் தூஷித்தோம் என்று கூறுவது அபாண்டமேயாகும். "கிருஸ்துமத போதகர்கள் நம்மவர்கள் முன் நின்று நமது மதத்தில் குற்றங்கூறி நம்மவரைத் தங்கள் மதத்திற்கு இழுத்துக்கொள்ளலாம், நாம்மட்டும் நமது மதத்தவரைத் தம்மதத்தைக் கைவிட வேண்டாமென்று கூறுவது குற்றம்" என்பது எங்கேனும் நீதியாகுமோ? நம்மவருக்கு நாம் எச்சரிக்கைசெய்வது மனம்பொறுமல்தான் நாம் கிருஸ்துமதத்தைத் தூஷிப்பதாக நம்மேல் இல்லாத குற்றத்தைக் கூறுகிறார்கள் போலும். இது சற்றும் நியாயமாகாதென்று முடிவாய்க் கூறுகிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## ஓர் அறிக்கை.

சந்தா நேயர்களனைவர்களும் கீழ்க்காணும் விஷயங்களைக் கவனித்து வாசித்தறியும்படி வேண்டிக்கோள்கிறோம்:—

அடுத்த ஆனி மாதத்தோடு ஆனந்தனுடைய ஆறாவதாண்டு நிறைவுற்று, ஆடிமாதம் 7-வது ஆண்டு பிறக்கப் போகிறது. ஒவ்வொரு வருடமும் வி.பி. யனுப்புவதாலுண்டாகும் கஷ்ட நஷ்டங்களைப்பற்றி நண்பர்களுக்கறிவித்து முன்பணம் அனுப்பும்படி வேண்டிக் கொண்டிருக்கிறோம்.

இம்முறை வி.பி. களால் நமக்கு நஷ்டமுமதிகமாகும். ஏனெனில், எல்லா வி. பி.களும் ரிஜிஸ்டர் செய்யப்படவேண்டும். அதற்கு 2 அணா. அதன்றி 1921ஹு ஏப்ரல்மீ 18உயிலிருந்து மணியார்டர் கமிஷன் 1 ரூபாய்க்கும் 2 அணா வாகிறது. இவற்றோடு வி. பி.யிலனுப்பப்படும் சஞ்சிகைக்கு அரையணா தபாற்பில்லை ஒட்டவேண்டும். இவற்றால் முன் பண மனுப்புகிறவர்களுக்கு ரூபா. 1—2—0 மட்டுமே செலவு—வி. பி.யில் பெற்றுக்கொள்கிறவர்கள் ரூபா 1—5 செலுத்திப் பெற்றுக்கொள்ளவேண்டும். வி. பி. வாபிசாகிவந்தால் 3 அணா நமக்கு நஷ்டமேற்படும்.

ஆகையால் முதலாவதாக அடுத்த வருடம் சஞ்சிகையை நிறுத்த விரும்புவோர் உடனே 1921ஹு ஜூன்மீ 15உக்குள் நமக்கு அறிவிக்கும்படி பன்முறையும் வேண்டிக்கொள்கிறோம்.

நாம் பன்முறை வேண்டிக்கொண்டும், ஒவ்வொரு வருடமும் பலர் முன்னாடி யறிவிக்காமலே யிருந்துவிட்டு, பிறகு வி.பி வரும்போது வாபீஸ் செய்து விடுகிறார்கள். அந்தோ! இத்தகைய நடக்கை மிக்க இழிவான நடக்கை யன்றோ. இவ்வாறு இனியும் செய்தால் நாம் முன்பண மனுப்புவோர்க்கு மட்டுமே சஞ்சிகை யனுப்ப நேரிடும். ஆகையால் தாய் நாட்டிற்குத் தீங்கு செய்யலாகாதென்று கருதுவோர், சஞ்சிகை 7-ம் வருடம் வேண்டாமாயின் முன்னாடியே (30-6-21க்குள்) யறிவித்துவிடப் பிரார்த்திக்கிறோம்.

இரண்டாவது, வி.பி யில் பெற்றுக்கொள்வதால் நேரிடும் வீணான நஷ்டத்தைக்கவனித்து மணியார்டர் மூலமாக 1921ஹு ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை யனுப்பி விடும்படி வேண்டிக் கொள்கிறோம்.

சஞ்சிகையை நிறுத்தும்படி வரைவோரும், மணியார்டர் அனுப்புவோரும், சந்தா நம்பரைத் தெரிவிக்காவிட்டால் பின்னால் வி.பி வரும். ஆகையால் ஒவ்வொரு சந்தாதாரும் தயவு செய்து இம் மாதம் அல்லது அடுத்தமாதம் வரும் சஞ்சிகையின் மேல்விலாசத்தைப் பார்த்து நம்பரை யவசியம் குறித்து வைத்துக்கொள்ளும்படி பிரார்த்திக்கிறோம்.

நம்பரை மட்டும் சரியாகக் குறித்தனுப்பினால ஒரு தவறும் நேராது. சிலர் இரண்டு மூன்றுபேர் சந்தாவைச் சேர்த்தனுப்பிவிட்டு அவற்றில் ஒருவர் இருவர் பெயரை மாத்திரம் எழுதிவிட்டு மற்ற வர்களுடைய நம்பர் தெரியவில்லையென் றெழுதிவிடுகிறார்கள். பிறகு 'முன்பணம் அனுப்பியிருக்க வி. பி. யேன் அனுப்பினீர்க,ளென்று மனம்போனபடி எழுதுகிறார்கள். அத்தகைய தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளியல்ல.

சஞ்சிகையில் அபிமானமுடைய நண்பர்கள் இது முதல் அடுத்த ஜூன் மாதம் 30உக்குள் நம்மிடம் வந்து சேரும்படியாக இச்சிறிய சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் அனுப்பிவிடு வது கஷ்டமான காரியமாகாது.

இவ்வாறு 1921ஹ ஜூன்மீ 30உக்குள் நம்மிடம் வந்து சேரும்படி முன்னுடிச் சந்தாத்தொகையை யனுப்பி விடுவோர்களு க்கு "துந்துமி வருடத்திய ஆனந்தபோதினி சுத்த வாக்கிய பஞ் சாங்கம்" இனமாக அளிக்கப்படும்.

இரௌத்திரிஹ மேமீ சஞ்சிகையில் 424 - வது பக்கத்தில் 7 - வது பத்தியில் குறித்தபடி 1920ஹ ஜூலைமீ 1உக்குள் 6-வது வருடசந்தாவை யனுப்பியவர்களுக் கெல்லாம் துன்மதி வருட பஞ்சாங்கம் பங்குனி சஞ்சிகையோடு அனுப்புவதாகக் கூறி யிருந்தோம்; ஆனால், சஞ்சிகையோடு பஞ்சாங்கமும் சேராமற் போய் விடுமென்ற கலவரத்தால் பஞ்சாங்கத்தைப் பிறகு அனுப்ப நேர்ந்தது. 1920ஹ ஜூலைமீ 1உக்குப் பின் சந்தாத்தொகையை அனுப்பியவர்களில் சிலர் தங்களுக்குப் பஞ்சாங்கம் வரவில்லை யென்றெழுதுகிறார்கள். 1920ஹ ஜூலைமீ 1உ க்குள் சந்தாவை யனுப்பியவர்களுக்கு மட்டுமே பஞ்சாங்கம் இனமாக அனுப்பப் படும் என்று அறிவித்துக் கொள்கிறோம்.

இப்போது முதலே சந்தா நம்பரைக் குறித்து வைத்துக்கொள்ள மறவாதிருக்க வேண்டுகிறோம்.

---

## துன்மதிஹத்திய "ஆனந்தபோதினி" சர்வமுகூர்த்த சுத்த திருக்கணித பஞ்சாங்கம்.

ஹெக்கின்பாதம் கம்பெனியின் எல்லா இரயில்வே புக்ஸ்டால் களிலும், மற்ற எல்லா வெளியூர் புத்தக வியாபாரிகளிடமும் எங் கள் ஆபீஸிலும் கிடைக்கும்.

பத்திராதிபர்.

---

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்.

(358-ம் பக்கத்தொடர்ச்சி)

அந்தப் பத்திரிகையைப்படித்துச் சேபியில் வைத்துக்கொண்டு சற்று நேரம் சிந்தித்தான். முதலில் இன்னது செய்வதென்று அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. பிறகு சற்று நேரத்திற்குள் ஏதோ ஒரு யோசனை அதன் மனதில் உதித்தது. உடனே கண்களில் ஒருவித தீர்மானக் குறியோடு தட்டென்று எழுந்தான்.

ஆனால் அவன் அன்று நவீன புரியிற் கால்வைக்கும்படி அமைப்பில்லை. கடவுள் எண்ணம் ஒருவாறிருக்க, மனிதன் எண்ணம் எங்கேனுங் கடைத்தேறுமோ? இரங்கநாதனுக்கு முன் நாம் போகவேண்டுமென்பது அவனுடைய நாட்டம்.

ஆனந்தலிங் தப்பிப்போய் விட்டதைக் கண்ட துஷ்டர் இருவரும் சற்று நேரம் பிரம்மத்தி பிடித்த மாதிரியிருந்தார்கள். சாமிநாதன் சற்று நேரம் ஆழ்ந்த யோசனையிலிருந்து பிறகு,

"ஆ! ஆனந்தலிங் துப்பறிபவன்; அவனைப்பற்றியும் அவன் துணிகரமாகிய சாமர்த்தியச் செயல்களைப்பற்றியும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் எப்படி யிங்குவந்தான் ?" என்றான்.

இரங்:—அது தானே பெரிய ஆச்சரியம் !

சாமி:—அதிலும் உன்னைத் தொடர்ந்து என் வீட்டிற்குள் வந்து பதுங்கியிருக்கவேண்டியதேன் ? நவீனபுரியில் உன்னைத் தெரிந்து கொண்டு எக்காரணத்தாலோ பின் பற்றிக்கொண்டு வந்திருக்கவேண்டும்.

இரங்:—ஒருகாலுமில்லை. நவீனபுரியில் நான் இவனைக் காணவேயில்லை இவன் என்னைக்கண்டாலும் இவ்வளவு தூரம் பின் பற்றிவர இவனுக்கு என்ன காரணம் ஏற்பட்டிருக்கும் ? அந்தப் பெண் விஷயம் என்னமோ இவனுக்கு எள்ளளவுகூடத் தெரியாது.

சாமி:—அது உண்மையே......ஒரு சமயம்......

இரங்:—என்ன ஒரு சமயம் ?

சாமி:—"அதென்னவெனின், ஒருசமயம் அந்தப்பழைய சங்கதியேதாவது கொஞ்சம் எட்டியிருந்தால்--என் தந்தையின் கொலை விஷயத்தைப் பற்றி இங்குவந்தால் ஏதாவது உளவு அகப்படுமென்று கருதி வந்திருக்கலாம் என்பதே" என்று குசு குசு வெனப்புகன்றான்.

இரங்:—அப்படியாயின் நமது சம்பாஷணையால் அவனுக்குச் சற்று அனுகூலமே கிடைத்தது.

சாமி:—ஆம். நாம் ஏதோ ஒரு பெண்ணைக் களவாடிக்கொண்டுவரப்போகிறோம் என்று தெரிந்து கொண்டான் அவனிடம் ஏதோ தக்க வுளவகப்பட்டிருக்கிறது; அது இருக்கும் வரையில் அவன் நம்மை விடப்போகிறதில்லை.

இராங்:—"ஆ அவன் இரங்கநாதனுக்குக் குறுக்கேவரலாகாது. நல்ல வழியோ கெட்ட வழியோ அவனை யொழித்து விடவேண்டும். இது காறும் என்னைப்பிடிக்கத்தக்க சாமார்த்தியவானுகிய துப்பறி பவன் எவனுமில்லை" என்ருன்.

அவனுக்குள் தான் கண்டது ஆனந்தஸிங்கே யென்று பூரண நம்பக முண்டாய் விட்டது. ஆகையால் எப்படியாவது அவனை இந்த நகரத்தில் கண்டு பிடிக்கலாம் என்ற திடத்தோடு சாமிநாதனையும் அழைத்துக் கொண்டு அப்போதே புறப்பட்டான்.

இவர்கள் இருவரும் முதல் முதல் சென்றதே ஆனந்தஸிங் இறங்கி யிருந்த ஓட்டல். ஓட்டல் இலிகிதன் கூறிய அடையாளங்களால் ஆனந்த ஸிங் அங்குதான் இறங்கியிருக்கிருன் என்று தெரிந்துகொண்டார்கள். இலிகிதனுக்குக் கொஞ்சம் காசுகொடுத்து அந்த ஆள் இறங்கி யிருக்கும் அறைக்கு அடுத்த அறையில் நாங்கள் இருக்கச் சற்று இடந் தரவேண்டும் என்று ஏற்பாடு செய்துகொண்டார்கள்.

'பணம் என்ருல் பிணமும் வாயைத்திறக்கும்' என்பதுபோல் இலிகி தன் அவ்வாறே யொப்புக்கொண்டு ஆனந்தஸிங் இருக்கும் அறைக்குப் பக்கத்து அறையில் இந்த இரண்டு துஷ்டர்களுக்கும் இருக்க இடம்விட் டான். இரண்டறைகளுக்கும் இடையிலுள்ள கதவுகளுக் கிடையில் சந் திருந்தது. கள்ளர் இருவரும் அதன் மூலமாய்ப் பார்த்தபோது, ஆனந்த ஸிங் தன் மாறுவேடமனைத்தும் களைந்துவிட்டுச் சுயவுருவத்தோடு பெரிய நாற்காலியில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள்.

இதனுல் அவன் சுயரூபம் இன்னதென்று அவர்களுக்கு நன்ருய் விளங்கிவிட்டது.

மறுநாட் காலையில் ஆனந்தஸிங் நவீனபுரிக்குச் செல்லக்கருதி இர யில் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான். வழியில் தான் செல்லும் இராஜ பாட்டையின் மறுபக்கம் தனக்குச் சற்றுமுன் ஒரு ஆள் செல்வதைக் கண் டான். அம்மனிதன் ஆனந்தசிங்கைச் சற்றும் கவனிக்காதவன்போல் செல் கிருன். ஆனந்தஸிங் அவன் இரங்கநாதனே யென்று தெரிந்துகொண்டு அவனைப் பின் தொடர்ந்தான்.

இரங்கநாதன் சற்று தூரம் சென்று அப்பாதையை விட்டு ஒரு வீதி யிற் றிரும்பினுன். ஆனந்தஸிங் அவனை விடாமற் பின் தொடர்ந்தான். இரண்டொரு வீதிகளைக் கடந்தபின் இரங்கநாதன் ஒரு சந்துவழியே திரும்பினுன்.

ஆனந்தஸிங் தானும் அச்சந்தில் திரும்பியபோது இரங்கநாதன் தன் கண்களுக்குப் புலப்படவில்லை. ஆனந்தஸிங் அங்குநின்று சுற்று முற்றும் பார்த்தான்; சந்தடியேயில்லை. அவ்வீதியின் பெரும்பாகம் மரத்தால் கட் டப்பட்டு கிலமாகிவிட்டதால், இனி வாசம்செய்யத் தகுதியானவையல்ல வென்று நகரசங்கத்தாரால் (முனிஸிபாலிடியாரால்) கண்டனம் செய்யப் பட்ட வீடுகளுள்ளவை யென்று தெரிந்தது. ஆகையால் அவை யாவும் காலியாய்க் கிடக்கின்றன.

ஆனந்தஸிங் அவ்வீடுகளைப் பார்த்துக்கொண்டே அவற்றின் ஒரு சந்தில் திரும்பினுன். அச்சமயம் பின்னுலிருந்து யாரோ மெதுவாய்ப்

பதுங்கி வருவதுபோல் சத்தம் கேட்டதும் அவன் திரும்பிப் பார்ப்பதற்குள் தலைமேல் பலமாய் ஒரு அடி விழுந்ததுபோ லிருந்தது. அதோடு அவன் ஸ்மரணை போய்விட்டது.

இரண்டு பேர் அவனைக் குனிந்து பார்த்தார்கள். அவர்கள் இரங்கநாதனும் சாமிநாதனுமே யென்று நாம் கூறவேண்டியதில்லை. அத்துஷ்டரிருவரும் அவனுக்கு ஸ்மரணையில்லை யென்றறிந்ததும் அப்பாழடைந்த வீதியில் தரையில் இருந்த ஒரு மரக்கதவைத் திறந்து அவனை யிழுத்துப்போய் அத்துவாரத்தில் போட்டுக் கதவை மூடிவிட்டார்கள். உடனே அங்கிருந்து சளால் என்று சத்தம் கேட்டது. ஏனெனில் அது சிலகாலமாய் அடைபட்டுக் கிடக்கும் பெரிய வீதிச் சாலகம். இருவர்க்கும் "இதோடு நமது பெரிய விரோதி யடியோ டொழிந்தான்" என்று மிக்க சந்தோஷமுண்டாய்விட்டது.

இவர்களைப்போல் முழுமூடர்கள் வேறில்லை. தங்கள் எண்ணம் அப்படியே நிறைவேறும், அதைத் தடுப்பவர் யாருமில்லை யென்றெண்ணிக் கொண்டார்கள். மாளிகையிலும், சாலகத்திலும், நீரிலும், நெருப்பிலும், வளியிலும், வெளி வானிலும், எங்கணும் எப்போதும் நமது செயலைக் கண்டுகொண் டிருக்கும் கள்ளனாகிய ஒருவன் உளன் என்ற அறிவு அவர்கட்கில்லை. ஆதலால் "நமது குற்றத்தைக் கண்டுபிடிக்க வல்லவனாகிய ஒருவனை இம்மண்ணுலகை விட்டொழித்து விட்டோம், இனிப் பயமில்லை" என்று ஆனந்தமும் நிம்மதியு மடைந்தார்கள்.

## 6-வது அத்தியாயம்.

மேற்கண்ட துக்க சம்பவம் நடந்து இரண்டு வாரங்கள் கழிந்தன. ஒரு நாள் நல்ல இருள் சூழ்ந்து காற்றும் மழையும் அடித்துக்கொண்டிருக்கிறது. அச்சமயம் இரண்டு கறுப்புப் புரவிகள் பூட்டிய ஒரு வண்டி சாமிநாதனுடைய மாளிகையில் முன் வந்து நின்றது. அந்த வண்டியின் மேல் ஒரு துணிப்போர்வை போட்டு மூடியிருந்தது.

அவ் வண்டியிலிருந்து இரண்டு பேர் முன்னே இறங்கினார்கள். இருவரும் தங்கள் முகங்கள் தெரியாதபடி முகமூடி யணிந்திருந்தார்கள். இறங்கிய பின் அவர்களில் உயரமானவன் வண்டியின் கதவை முழுதும் திறந்து விட்டு வண்டிக்குள் கரங்களை விட்டு பளுவான எதையோ ஒன்றை யிழுத்துத் தன் தோள்மேல் தூக்கிக்கொண்டான்.

பிறகு இருவரும் வீட்டிற்குள் சென்று கூடத்தில் அம்மூட்டையை வைத்தார்கள். அது ஒரு பெரிய பை. அதன் வடிவத்தையும், அதை யவன் மெதுவாய்க் கீழே வைத்ததையும் நோக்க அதற்குள்ளிருப்பது ஓர் மனித வுருவம் என்று யாரும் தெரிந்து கொள்ளலாம். அவர்களிருவரும் சற்று நேரம் குசு குசு வென்று பேசியபின் அங்கு எரிந்து கொண்டிருந்த தீபத்தை யணைத்து விட எங்கும் இருள் சூழ்ந்தது.

* * * * * *

* * * * *

(தொடரும்)

ஆறணி-குப்புசாமி முதலியார்.

# பொதுசமாச்சாரங்கள்.

**சிம்னிகள் உடையாமலிருக்க இன்னொரு முறை.**—மண்ணெண்ணெய் விளக்குச் சிம்னிகளை வாங்கிவந்தவுடன் பொறுக்கும்படியான வெந்நீரில் பத்து நிமிஷம் வரையில் போட்டுவைத்திருந்து, பிறகு அதை யெடுத்து நன்றாகத் துடைத்து ஈரமெல்லாம் காய்ந்தபின் உபயோகித்தால் உடையவே உடையாதெனச் சொல்லப்படுகிறது. இதையும் பரீட்சித்துப் பார்க்க வேண்டியதுதான்.

**ஆகாயக் கப்பல்கள்.**—4,000 குதிரை பலமுள்ள பிரமாண்டமான ஆகாயக் கப்பல்களைக் கட்டுவதற்கு பிளான்கள் தயாரிக்கப்பட்டிருக்கின்றனவென்றும், அவை ஒவ்வொன்றும் 100 பிரயாணிகளையும், வேலைக்காரரையும், நிலக்கரி, வழி உணவுக்கு வேண்டிய மற்றுந் தளவாடங்களையும் எடுத்துக்கொண்டு தெம்ஸ் ஆற்றினின்று புறப்பட்டு அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்து நாற்பது மணிநேரத்தில் வட அமெரிக்காவைச்சேர்ந்த நியுயார்க்கென்ற பட்டணத்துக்குப்போய்ச் சேருமாம்.

**தபால் கட்டண உயர்வு**—ஸ்ரீ ராஜாங்கத்தாரின் 1921-22-ம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தில், வரவைவிட செலவு அதிகமாயிருந்தநிமித்தம், செலவைக் குறைக்கும் வகை ஒன்றுந் தோன்றாததால், வரவை அதிகப்படுத்தும் வகைகளில் தபால் கட்டண உயர்வு ஒன்றாகத் தீர்மானிக்கப்பட்டு விட்டது. முதலில், தபாற் கார்டுகளின் விலையைக் காலணாவிலிருந்து, அரையணாவாக உயர்த்தவேண்டு மென்ற பிரேரணை, சட்டசபைஅங்கத்தினரிற் சிலருடைய ஆட்சேபனையால் அடிபட்டுப்போயிற்று. ஆதலால், தபால் கார்டு இதுவரையிலும்போலவே காலணாவுக்குதான் விற்கப்படும். ஆனால் கடிதங்களுக்கும் மற்றவைகளுக்கும், பின்கண்டவாறு தபால் கட்டணங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன:—

கடிதங்கள்—

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| அரைத் தோலாவுக்கு அல்லது அரை ரூபாய்க்கு அதிகப்படாத எடையுள்ள கடிதங்களுக்கு... ... | 0 | 0 | 6 |
| அரைத் தோலாவுக்குமேல் ஒரு தோலாவரையில் ... | 0 | 0 | 9 |
| ஒரு தோலாவுக்குமேல் $2\frac{1}{2}$ தோலாவரையில் ... ... | 0 | 1 | 0 |
| $2\frac{1}{2}$ தோலாவுக்குமேலுள்ள ஒவ்வொரு $2\frac{1}{2}$ தோலாவுக்கும் | 0 | 1 | 0 |

புக் போஸ்டு, அல்லது பாட்டர்ன் போஸ்டுகளுக்கு (Pattern Post)—

| | | | |
|---|---|---|---|
| 5 தோலாவுக்கும் அதற்குக் குறைந்த எடைக்கும் ... | 0 | 0 | 6 |
| அதற்குமேற்பட்ட ஒவ்வொரு 5 தோலாவுக்கும் ... | 0 | 0 | 6 |

உள்ளூர் மணியார்டர்கள்—

| | | | |
|---|---|---|---|
| 10 ரூபாய்க்கு அதிகப்படாத எந்தத் தொகைக்கும் கமிஷன் ... ... ... ... ... | 0 | 2 | 0 |
| 10 ரூபாய்க்கு மேற்பட்டு 25 வரைக்கும் ... ... | 0 | 4 | 0 |
| 25 ரூபாய்க்கு மேற்பட்டு பிரதி முழு 25 ரூபாய்க்கும் ... | 0 | 4 | 0 |

இந்த விதிகள் வி. பி. மணியார்டர்களுக்கும் பொருந்தும்.

**குறிப்பு.**—இம்மாற்றங்கள் இந்த ஏப்ரல் மாதம் 18-ந்தேதி முதல் அமுலுக்கு வருமென்று தெரிகிறது.

# " ஆனந்த போதினி " பஞ்சாங்கம்

## துன்மதிஞு வைகாசிமீ—சாலிவாகனம் 1844—கலி 5023

## பசலி 1330-31—கோல்லம் 1096-97—ஹிஜுரி 1339-40

## இங்கிலீஷ் 1921ஞு மேமீ—ஜூன்மீ

| வைகாசிமீ | மேமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | சப்10-45 | ஆயி-31-53 | ம34-53அ | ஆயுதம் பயிற்ற |
| 2 | 15 | ஞா | அஷ்5-16 | மக-31-46 | ம31-46சி | மந்திரம் ஜெபிக்க |
| 3 | 16 | திங் | நவ0-18<br>தச56-58 | பூா-29-16 | சித்-60 | குளம் கிணறு வெட்ட |
| 4 | 17 | செ | ஏகா53-23 | உத்-27-33 | அ27-33சி | ஆபரணம் பூண [விரதம் |
| 5 | 18 | புத | துவா51-0 | அஸ்-27-3 | மர27-3சி | வைசாக சுக்ல துவாதசி |
| 6 | 19 | வியா | திர49-43 | சித்-26-53 | சி26-53அ | வித்யாரம்பம் |
| 7 | 20 | வெ | சது49-0 | சுவா-27-46 | சித்-60 | கரிநாள், விவசாயம் [ரம் |
| 8 | 21 | சனி | ○49-53 | விசா-29-2 | சித்-60 | நம்மாழ்வார் திருநக்ஷத் |
| 9 | 22 | ஞா | பிர51-48 | அனு-32-56 | மர-60 | மரணயோகம் \ [ங்க |
| 10 | 23 | திங் | துதி54-43 | கேட்-37-6 | சித்-60 | சூளை போட, கடன் வா |
| 11 | 24 | செ | திரி58-45 | மூல-42-26 | அ42-26சி | திருஞானசம்பந்தர் நக்ஷ |
| 12 | 25 | புத | சது60-0 | பூரா-48-10 | அமி-60 | கணிதாரம்பம செய்ய |
| 13 | 26 | வியா | சது3-48 | உத்-55-38 | சித்-60 | கர்ப்பாதானம் |
| 14 | 27 | வெ | பஞ9 33 | திரு-60-0 | மர-60 | அக்கினிநாள் முடிவு |
| 15 | 28 | சனி | சஷ்15-20 | திரு-3-6 | சித்-60 | சப்தமி திதி,காது குத்த |
| 16 | 29 | ஞா | சப்21-8 | அவி-10-11 | ம10-11சி | கரிநாள் |
| 17 | 30 | திங் | அஷ்26-8 | சத-16-46 | சித்-60 | கரிநாள் |
| 18 | 31 | செ | நவ29-53 | பூர-22-18 | ம22-18அ | ............ |
| 19 | 1 | புத | தச31-53 | உத்-26-13 | சி26-13ம | ருதுசாந்தி செய்ய |
| 20 | 2 | வியா | ஏ32-11 | ரேவ-28-18 | சி28-18அ | ஹபரா ஏகாதசி |
| 21 | 3 | வெ | து30-13 | அசு-28-23 | அ28-23சி | விவாகம் செய்ய |
| 22 | 4 | சனி | திர26-46 | பர-26-43 | சி26-43அ | வாகனாதிகள் வாங்க |
| 23 | 5 | ஞா | சது21-53 | கிரு-23-26 | சித்-60 | திதி துவயம |
| 24 | 6 | திங் | ●14-58 | ரோ-18-55 | அ18-55சி | கோடியுடுக்க |
| 25 | 7 | செ | பிர7-18<br>து59-18 | மிரு-12-36 | சி12-36ம | |
| 26 | 8 | புத | திரி51-21 | திரு-7-13 | சித்-60 | |
| 27 | 9 | வியா | சது43-23 | புன-1-13<br>பூச-55-16 | அ1-13சி | |
| 28 | 10 | வெ | பஞ்36-3 | ஆயி-50-6 | மர-60 | |
| 29 | 11 | சனி | சஷ் 28-58 | மக-46-10 | அ46-10சி | |
| 30 | 12 | ஞா | சப்24-5 | பூர-42-58 | சி42-58அ | |
| 31 | 13 | திங் | அஷ்20-1 | உத்-41-16 | சித்-60 | |

1921ஞு ஜூன்மீ

| | | | |
|---|---|---|---|
| | கேது சுக் | கு செபு | |
| | 15உ மி-பு<br>25 ,,மி-செ | | |
| | | | குரு சனி |
| | | ராகு | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY STREET, MADRAS.